...சைப் பெருவுடையார் திருக்கோயிலில் நடை
... இராசராச சோழன் சதயப் பெருவிழா
...த்துவத்துறை அமைச்சர் மாண்புமிகு
...ன் அவர்கள், உரை





தஞ்சைப் பெருவுடையார் திருக்கோயிலில் நடைபெற்ற இராசராசசோழன் சதயப் பெருவிழாவில், மேலவைத் தலைவர் 'சிலம்புச் செல்வர்' மாண்புமிகு ம. பொ. சிவஞானம் அவர்கள் உரை நிகழ்த்துதல்.

முகப்பு :

தஞ்சைப் பெரியகோயிலைக் கட்டிய இராசராசசோழனின் திருவுருவச் சிலை

# திருக்கோயில்

மாலை: 21 || காளயுக்தி ஆண்டு - தைத் திங்கள் — சனவரி-1979 || மணி: 4

## சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்!

திருக்கோயில் திங்கள் இதழின் சந்தாதாரர் களாகச் சேர விருப்பமுள்ளவர்கள்,

**ஆணையர் அவர்கள்,**
**அறநிலைய ஆட்சித்துறை,**
**சென்னை — 600 034**

என்ற முகவரிக்கு மணியார்டர் மூலம் பணம் அனுப்பிச் சந்தாதாரராகச் சேர்ந்து கொள்ளலாம்.

ஜனவரி முதல் டிசம்பர் வரை உள்ள காலம், சந்தா ஆண்டு எனக் கணக்கிடப்படும். இடைப் பட்ட காலத்தில் சந்தாதாரராக விரும்புவோர், முழு ஆண்டிற்குரிய சந்தாத் தொகை ரூ. **15—00** உடன், இடைப்பட்ட காலத்தில் உள்ள மாதங் களுக்கு, ஒரு இதழ் ரூ. **1—25** வீதம் சேர்த்துப் பணம் அனுப்பிச் ''சந்தாதாரர்'' ஆகலாம்.

தனிப்பட்ட 'சந்தாதாரர்கள்' ஒவ்வொரு வரும் நேரடியாக, ஆணையர் அலுவலகத்திற்கே மணியார்டர் மூலம் பணம் அனுப்புமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறது.

பழைய சந்தாதாரர்கள், கடிதம் எழுதும் பொழுதும், பணம் அனுப்பும் பொழுதும், தங்கள் சந்தா எண்ணையும் தவறாமல் தெரிவித்து உதவினால்தான், உடனுக்குடன் ஆவன செய்ய வசதியாக இருக்கும். புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பும்பொழுது, மணியார்டர் கூப்பனில், புதிய சந்தா என்பதைக் குறிப்பிடு மாறும், சரியான முழு முகவரியைப் பின்கோட் *[PINCODE]* எண்ணுடன் தெரிவிக்குமாறும், கேட்டுக்கொள்ளப்படுகிறது.

வெளிநாட்டுச் சந்தாதாரர்களின் முகவரிகள் அனைத்தும் செவ்வனே பதிவு செய்து வரிசைப் படுத்தப் பெற்று அவர்கள் எல்லோருக்கும் முறை யாக இதழ்கள் அனுப்பப்படுகின்றன. தற் பொழுது வெளிநாட்டுச் சந்தாதாரர் ஒவ்வொரு வருக்கும் ஆண்டு ஒன்றுக்கு அஞ்சல் செலவு மட்டுமே ரூ. **9—60** ஆகின்றது. ஆதலால் வெளி நாட்டுச் சந்தா, ரூ. **20—00**-ல் இருந்து ரூ. **25—00** ஆக ஜனவரி **1978** முதல் மாற்றி அமைக்கப் பட்டது. வெளிநாட்டுச் சந்தாதாரர்கள் அவ்வப் போது தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளக் கேட்டுக் கொள்ளப்படுகின்றனர்.

## பொருளடக்கம்



**ஆசிரியர் : ந. ரா. முருகவேள், M.A., M.O.L.**

**இந்து சமய அறநிலைய (ஆட்சி)த் துறை வெளியீடு**

**"என் கடன் பணி செய்து கிடப்பதே"**

# வள்ளலார் நூற்றாண்டுச் சிறப்புச் சொற்பொழிவு

மாண்புமிகு
இராம. வீரப்பன் அவர்கள்
செய்தி-அறநிலையத் துறை அமைச்சர்

கடந்த அக்டோபர் முதல் நாளிலிருந்து எட்டு நாட்களாக உலக உத்தமர் காந்தியடிகள் விழாவையும், சுமார் நூற்று அம்பது ஆண்டுகளுக்கு முன்னாலே தோன்றித் தமிழகத்திலேயிருந்து உலகத்திற்குச் சமரச சன்மார்க்க தத்துவத்தை வழங்கிய வள்ளலாருடைய விழாவையும் ஒன்றாக இணைத்துக், கடந்த பல ஆண்டுகளாக நடத்தி வரும் இந்த விழாவின் இறுதி நாளான இன்று, உங்களைச் சந்திக்கின்ற வாய்ப்புக் கிடைத்தது. உண்மையிலேயே என் போன்றவர்களுக்கு ஒரு பெறற்கரிய வாய்ப்பு என்பதை, நான் தெரிவித்துக் கொள்ளக் கடமைப்பட்டிருக்கின்றேன்.

கடந்த ஏழு நாட்களாகவும், இன்றும், இந்த நிகழ்ச்சிகளிலே பங்கு பெற்று, பல கருத்துக்களை வழங்கியிருக்கின்ற அறிஞர் பெருமக்கள், சான்றோர்கள் மத்தியிலே, என்போன்றோர் பங்கு பெறுவது என்பது, எங்களுக்கு ஏற்பட்டிருக்கிற தகுதியின் காரணமாக அல்ல என்பதை, நான் மனப்பூர்வமாக உணர்ந்துகொண்டு உங்கள் முன்னால் நிற்கிறேன். நான் ஏற்றுக் கொண்டிருக்கிற பதவியின் காரணமாக, இந்தத் தகுதி எனக்கு அளிக்கப்பட்டிருக்கிறது என்பதை நான் எண்ணுகிறபொழுது, தமிழ் மக்களுடைய பிரதிநிதியாக, நான் உங்கள் முன்னால் நிற்கின்றேன். அந்தத் தகுதிதான் இங்கே நிறுத்தியிருக்கிறது என்பதையும் உணர்ந்து, நான் இங்கே என்னுடைய கருத்துக்களை எடுத்துரைக்க முற்படுகின்றேன்.

இராமலிங்க அடிகளார் இந்த நாட்டிற்கு அருளிய சன்மார்க்க நெறிகளைப் பற்றியோ, அந்த நெறிகளுக்கு அடியிலே பொதிந்து கிடக்கின்ற தத்துவங்களைப் பற்றியோ, நான் எடுத்து விளக்குவேன் என்று நீங்களும் கருதமாட்டீர்கள்; நானும் அப்படிக் கருதமாட்டேன் என்று முதலில் எடுத்துச் சொல்லிவிடுகின்றேன்.

யாரும் சொல்லாத அரிய விளக்கங்களை, நான் இங்கே எடுத்து வைப்பேன் என்ற எண்ணத்திலும், என்னை நீங்கள் அழைக்கவில்லை என்பதையும், நான் நன்றாக உணர்ந்து கொண்டிருக்கிறேன். நான் ஏன் அழைக்கப்பட்டேன் என்பதை, எனக்கு முன்னாலே இங்கே தீர்மானங்களை முன்மொழிந்து, உங்களுடைய ஒரு மித்த கருத்துக்களைப் பெற்று, இதை நிறைவேற்றித் தர வேண்டுமென்று என் அருமைச் சகோதரர் திரு மகாலிங்கம் அவர்கள் என்னிடத்திலே வழங்கியபோது, நான் எதற்காக அழைக்கப்பட்டேன் என்பது, இங்கே நிரூபிக்கப்பட்டுவிட்டது என்பதையும், நான் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆகவே, அரசின் சார்பிலே, குறிப்பாக அறநிலையத் துறையை நான் பொறுப்பேற்றுக் கொண்டிருக்கின்ற அமைச்சர் என்ற காரணத்தினாலே, இப்படிப்பட்ட ஒரு மன்றத்திலே, சான்றோர்களும்—தகுதி மிக்கவர்களும் நிரம்பியிருக்கின்ற—சத்திய ஞான சபையைத் தோற்றுவித்த வள்ளலாரின் சீடர்கள் நிரம்பி இருக்கின்ற இந்த மன்றத்திலே, நான் நிற்பதற்கு—உங்களுடைய வாழ்த்துக்களைப் பெறுவதற்கு—அல்லது நீங்கள் விரும்புகிற எண்ணங்களை—வேண்டுகோளை நிறைவேற்றுவதற்கு உரிய, ஒரு இடத்திலே இருக்கின்ற அந்தத் தகுதியைப் பெற்றுத் தந்தது, வள்ளலாருடைய தத்துவங்கள்தான் என்பதைத் தெரிவித்துக் கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறேன்.

வள்ளலாருக்கும் இவருக்கும் என்ன சம்பந்தம்? வள்ளலாருடைய தத்துவங்களை இவர் எங்கே பின்பற்றுவார்?' என்று நீங்கள் எண்ணக் கூடும். முற்பிறப்பிலேயோ, அல்லது மறு பிறவியிலேயோ, என்னைப் போன்றவர்களுக்கு நம்பிக்கை இல்லை என்பதை, நான் சொல்வதற்கு நீங்கள் என்னை அனுமதிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அது விவாதத்திற்குரியதாக இருக்கலாம்; சிலர் நம்பலாம், அல்லது சிலர் நம்ப மறுக்கலாம். ஆனால் எங்களைப் போன்றவர்கள், ஏறத்தாழ 12 வயதிலிருந்தே இன்றைக்கு 52 வயதைத் தாண்டியிருக்கிற என்னைப் போன்றவர்கள், ஒரு நாற்பதாண்டு காலம், எங்களை இந்த உணர்விற்கு ஆட்படுத்திக் கொண்டிருக்கிறோம் என்பதை, ஒளிவு மறைவு இல்லாமல் சொல்வதுதான், வள்ளலார் வழி வந்தவர்களுக்கு நியாயமான—நேர்மையான வழி என்பதை, நான் இங்கே தெரிவித்துக் கொள்கிறேன்.

வள்ளலாரைப் பற்றிய ஒரு வரலாற்றைப் படிக்கின்றபோது, அதிலே வள்ளலாரைப் பின்

சென்னைத் திருமயிலை இராசேசுவரி கல்யாண மண்டபத்தில், இராமலிங்கர் பணிமன்றத்தின் சார்பில் நடைபெற்ற வள்ளலார் நூற்றாண்டு விழாவில், நமது மாண்புமிகு அறநிலைய அமைச்சர் அவர்கள் நிகழ்த்திய சிறப்புச் சொற்பொழிவின் சுருக்கம் (8—10—78).

பற்றுகிற ஒரு பெரியவர், தாழ்வானவராகப் பிறந்து வாழ்ந்து மறைந்தவர்தான் பின்னாலே வள்ளலாராக வந்தார் என்ற ஒரு கருத்தைச் சொல்லி இருந்தார். அதை அவர் நம்பி இருக்கிறார். தன்னுடைய நம்பிக்கையை நாட்டில் சொல்லியிருக்கிறார். அது சரியா தவறா என்ற ஆராய்ச்சியிலே, நாம் ஈடுபடத் தேவையில்லை. நூற்று அய்ம்பது ஆண்டுகளுக்கு முன்னாலே தோன்றி, அவர் தன்னை இந்த உலகத்திலே யிருந்து மறைத்துக் கொண்ட நூறாண்டு காலத்திற்குப் பின்னாலே, நாம் அவரைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கின்றோம். அவரை நினைவு கூர்கிறோம். இதே காலத்தில் ஏறத் தாழ நூற்றுப்பத்து ஆண்டுகளுக்கு முன்னாலே தோன்றி, இருபது முப்பது ஆண்டுகளுக்கு முன்னாலே மறைந்த காந்தி அடிகளுடைய வாழ்க்கையையும் இணைத்து, இங்கே விழாக் கொண்டாடிக் கொண்டிருக்கிறோம். வள்ளலாருடைய தத்துவங்களைப் பின்பற்றுவதனாலேதான், அதை மனதார நம்பிய காரணத்தினாலேதான், இன்றைக்கு நான் உங்கள் முன்னாலே நிற்கிற தகுதியைப் பெற்றிருக்கிறேன் என்று சொன்னேனே, அதற்கு என்ன அடிப்படைக் காரணம் என்பதை, நான் சொல்வதற்கு நீங்கள் அனுமதி அளிப்பீர்கள் என்ற நம்பிக்கையோடு, அந்தக் கருத்தை உங்கள் முன்னாலே வைக்கிறேன். அதனை உங்களுடைய முடிவுக்கும் விட்டு விடுகிறேன். அதனை என் முடிவான கருத்து என்று நீங்கள் எடுத்துக் கொள்ளவும் தேவையில்லை.

இங்கே இரண்டு பெரியவர்களுடைய வாழ்க்கையை இணைத்து விழாக் கொண்டாடிக் கொண்டிருக்கிறீர்கள். நான் மூன்றாவது ஒருவருடைய பெயரையும் இணைப்பதற்கு என்னை அனுமதிக்க வேண்டுகின்றேன்.

*110* ஆண்டுகளுக்கு முன்னாலே தோன்றிய உலக உத்தமர் காந்தியடிகளை நாம் நினைக்கின்றபோது, நூறாண்டுகளுக்கு முன்னாலே பிறந்து மறைந்த தந்தை பெரியார் அவர்களையும், நான் இந்த நேரத்திலே நினைவு கூர்வதற்கு இங்கே அனுமதி வழங்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். வள்ளலாரை நான் எப்படித் தெரிந்து கொண்டேனென்றால், தந்தை பெரியார் அவர்கள் மூலம்தான் வள்ளலாரைத் தெரிந்து கொண்டேன். தந்தை பெரியார் அவர்கள், இந்த நாட்டிற்கு அறிமுகப்படுத்திய பெரியவர்கள், இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னாலே தோன்றிய வள்ளுவப் பெருந்தகையும், நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்னாலே தோன்றி, நூறாண்டுகளுக்கு முன்னாலே இயற்கையோடு கலந்த வள்ளலார் பெருந்தகையும் ஆவார்கள்.

வள்ளலார் என்ன சொன்னார்? என்பதை, இங்கே இருக்கின்ற சன்மார்க்க சபையைச் சேர்ந்தவர்கள், எப்படி இந்த நாட்டிலே பரப்பியிருக்கிறீர்கள் என்று எனக்குத் தெரியாது. ஆனால் என் போன்றவர்கள் இளைஞர்களாக இருந்தபோது இந்தத் தத்துவங்களை எங்களுக்கு உணர்த்தியவர், தந்தை பெரியார் அவர்கள்!

வள்ளலார் தோன்றிய காலத்தில், அவர் என்ன சொன்னார்? அவர் சொல்லிய தத்துவங்கள் யாவை? என்பதைத் தயவு செய்து, இங்கே இருக்கின்ற சமரச சன்மார்க்கச் சங்கத்தைச் சார்ந்த அன்பர்கள், தங்கள் மனதிலே எடுத்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

இங்கே அரசுக்குச் சில வேண்டுகோளை வைத்திருக்கிறீர்கள். அவற்றிற்கு உரிய முடிவுகளை இங்கே அறிவிக்க இருக்கிறேன். அதே நேரத்தில், நான் அரசின் சார்பில் இங்கே வேண்டுகோள் வைக்கவில்லை. என்னைப் போன்ற சாதாரண குடிமக்களாகப், பொதுத் தொண்டிலே தங்களை இணைத்துக் கொண்ட இளைஞர்களாக, இந்த நாட்டிலே இன்றைக்கு இலட்சோபலட்சம் பேர் வாழ்ந்து கொண்டிருப்பவர்களின் சார்பிலே, சில கருத்துக்களை எடுத்து வைப்பதன் மூலம், இந்தச் சபையைச் சார்ந்தவர்கள் என்ன செய்ய வேண்டுமென்று நாங்கள் விரும்புகிறோம், எங்களைப் போன்றவர்கள் உங்களிடத்திலேயிருந்து என்ன எதிர்பார்க்கின்றார்கள் என்பதை எடுத்துரைப்பதற்கு, நீங்கள் அனுமதியளிக்க வேண்டுகிறேன்.

வள்ளலார் தோன்றிய காலத்தில், அவர்கள் சில கருத்துக்களைச் சொன்னார்கள். அந்தக் கருத்துக்கள் மறைக்கப்பட்டுவிட்டன, அல்லது மறுக்கப்பட்டு விட்டன என்று நான் சொல்லமாட்டேன்.

இந்தச் சமுதாயத்திலே இருக்கிற மக்கள், கொஞ்சம் 'தடித்த தோலர்கள்' என்று, அறிஞர் அண்ணா அவர்கள் சொல்வார்கள். அடிக்கடி சொல்வார்கள். ஆகவே இவர்களுக்கு ஒன்றைச் சாதாரணமாகச் சொன்னால் உடம்பிலே உறைக்காது, கொஞ்சம் வேகமாகச் சொன்னால் தான் இவர்களுக்குப்படும் என்ற காரணத்தினாலே, தந்தை பெரியார் அவர்கள், சில தத்துவங்களைக் கொஞ்சம் வேகமாகச்சொல்லி இருப்பார்களே தவிர, அவர்கள் சொன்ன நோக்கமும், இங்கே எதிரிலே உருவமாக அமர்ந்திருக்கின்ற வள்ளலார் சொன்ன நோக்கமும் வேறு அல்ல. இரண்டு தத்துவங்களையும், தயவு செய்து இணைத்துப் பார்த்தீர்களேயானால், தமிழ்ச் சமுதாயத்திலே ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்கு முன்னாலே எந்தத் தத்துவங்கள் சொல்லப்பட்டனவோ, அந்தத் தத்துவங்கள் ஒவ்வொரு காலகட்டத்திலும் முன்னே வருவதும், அவைகள் திட்டமிட்டு மறைக்கப்படுவதும் அல்லது அழிக்கப்படுவதும், பின்னாலே ஒரு காலத்திலே தோன்றி அதைச் சொல்வதும், தொடர்ந்து நடைபெற்று வந்திருக்கின்ற வரலாறு என்பதைத், தயவு செய்து இங்கே இருக்கின்ற பெருமக்கள் உணர்ந்து கொள்வீர்களேயானால், நாம் இன்றைக்கு வள்ளலாருடைய நினைவை, இந்த நாட்டிலே நினைவு கூர்வதின் மூலம், அவர் சொல்லிச் சென்ற தத்துவங்களை, நாம் எடுத்துக் கொண்டிருக்கிறோமா என்பதை, தயவு செய்து நாம் எண்ணிப் பார்க்க வேண்டுமென்றுமென்று உங்களிடத்திலே கேட்டுக் கொள்கிறேன்.

வள்ளாலலரைப் போற்றுகிறோம், உத்தமர் காந்தியடிகளைப் போற்றுகிறோம். அவர்களை வணங்குகிறோம், வள்ளலார் உருவாக்கிய சத்திய ஞான சபையைப் பாதுகாக்க வேண்டுமென்கிறோம். அவர் வாழ்ந்த இடங்களை இந்த நாட்டுத் தலங்களாக அறிவிக்க வேண்டுமென்று விரும்புகிறோம். இவைகள் மட்டும் போதும் என்று நாம் விரும்புவோமேயானால், இவைகளெல்லாம் மியூசியங்களிலுள்ள கண் காட்சிகளாக அமைந்து விடுமே தவிர, வள்ளலார் எந்த நோக்கத்துக்காகத் தம் வாழ்வை ஒப்படைத்துக் கொண்டாரோ, அவைகள் நிறைவேறாது என்பதை, நான் இங்கே தெரிவித்துக் கொள்கிறேன்.

நாற்பத்தைந்து, அய்ம்பத்தைந்து வயதைத் தாண்டியவர்கள்தான், இங்கே நிறைந்திருக்கிறீர்கள். இளைஞர்கள் என்றால் மிகச் சிலராக இருக்கக்கூடும். ஆகவே பெரியவர்கள், ஒரு தலைமுறையைத் தாண்டியவர்கள்தான், இங்கே இருக்கிறீர்கள். எங்கள் எதிர்காலச் சந்ததிக்கு நீங்கள் என்ன சொல்கிறீர்கள் என்று தெளிவாகச் சொல்லுங்கள். வள்ளலாருக்கு விழாக் கொண்டாடுகிறோம். அவருக்கு ஆண்டுதோறும் அக்டோபர் முதல் தேதி முதல், எட்டாம் தேதி வரையில் தவறாமல் விழாக் கொண்டாடுவதற்கு, அமெரிக்கத் திருநாட்டிற்கு வேறு பணிக்காகச் சென்றிருந்தாலும், அங்கேயிருந்து பறந்து வந்து இந்த விழாவை நடத்துவதற்கு மகாலிங்கம் அவர்கள் இருக்கிறார்கள். இந்த மண்டபத்தைத் தருவதற்குத் திரு ஏ.வி.எம். அவர்கள் இருக்கிறார்கள். இவைகளை நிறைவேற்றுகின்ற பணியைச் செய்வதற்குத் திரு பகீரதன் அவர்கள் இருக்கிறார்கள். இவர்களுக்கு ஒத்துழைப்புத் தருவதற்கு ஊரன் அடிகள் இருக்கின்றார்கள் என்ற அளவில் மட்டும், காரியங்கள் நடைபெற்று முடிந்து விடுமேயானால், வள்ளலாரை நாம் காப்பாற்றுகிறோம் என்று பொருளல்ல என்பதை, நீங்கள் தயவு செய்து ஏற்றுக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

இங்கே ஊரன் அடிகள் பேசிக் கொண்டிருந்தபோது, ஒரு கருத்தைச் சொன்னார்கள். ஆசாரம், அனுட்டானம், தத்துவம் என்று சமயத்தை மூன்று வகையாகப் பிரிக்கின்றபோது, நாம் ஆசாரத்தை எடுத்துக் கொள்ளுறோம், அனுட்டானத்தை எடுத்துக் கொள்ளுகிறோம், தத்துவங்களை விட்டு விடுகிறோம் என்று சொன்னார்கள். தத்துவத்தை இந்த நாடு விட்டு விட்டதன் காரணத்தினாலேதான், புத்த மதம் இந்தியாவிலே இல்லை. இலங்கையிலும், ஜப்பானிலும், சீனாவிலும் இருக்கிறது. நாம் ஆசார, அனுட்டானங்களை வைத்துக் கொண்டு, அதன் பின்னாலே சுற்றிக் கொண்டிருக்கிறோம். அதனால்தான் வள்ளலாருடைய வரலாற்றையும் நான் பின்பற்றப் போகிறோமா என்பதை, நீங்கள் தயவு செய்து அருள் கூர்ந்து எங்களுக்குத் தெரிவியுங்கள்.

நாங்கள், எங்களுக்கு வள்ளலாரைத் தந்தை பெரியார்தான் காட்டினார் என்று சொல்லும்போது, ''கண்மூடிப் பழக்கமெல்லாம் மண்மூடிப் போக'' என்று சொன்ன வள்ளலாரை எங்களுக்குப் பெரியார் காட்டினார் என்கின்றோம். அதனாலே வள்ளலாரை எண்ணுகிற போதெல்லாம், எங்கள் இதயத்துக்குள்ளே அவர் அருட்சோதியாக எங்களுக்குத் தெரிந்து கொண்டிருக்கிறார். வள்ளலார் இந்தச் சமுதாயத்திலே என்னென்ன நடைபெற வேண்டுமென்று விரும்பினாரோ, அந்தத் தத்துவங்களை யெல்லாம் தூக்கி ஒரு புறம் வைத்து விட்டு, அவர் உருவாக்கிய சத்திய ஞான சபையை, அதிலே கூட, கடைசி காலத்திலே அவருடைய மனதை எப்படி நோக வைத்தார்களோ தெரியவில்லை. அவரே அதற்குப் பூட்டுப் போட்டு விட்டுத்தானே எங்கேயோ ஒரு குக்கிராமத்திலே போய் உட்கார்ந்து கொண்டிருந்திருக்கிறார். அன்றைக்கே அவர் போராடியிருக்கிறார் என்பதைத் தயவு செய்து நீங்கள் எடுத்துக் கொண்டாக வேண்டும்.

அவரோடு பலர் மோதியிருக்கிறார்கள். அவர்களுடைய தத்துவங்களோடு மோதி இருக்கிறார்கள். அவர் இந்தச் சமுதாயத்திற்காக ஒரு வாழ்வு வேண்டுமென்று போராடியிருக்கிறார். தாயுமானவருடைய வழி வந்தவர், அவருடைய மறுபிறவி என்று சொல்கிறார்கள் என்றால், வள்ளுவர் காலத்திலிருந்து ஒரே தத்துவத்தைச் சொல்லிக் கொண்டு வருகின்ற தமிழ்ப் பெரியார்களை நாம் பார்க்கிறோம். 'பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும்' என்று சொன்ன வள்ளுவர், 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்று சொன்ன திருமூலர், 'அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகி' என்று சொன்ன தாயுமானவர், உலகத்தை ஆண்டவனை அருட்சோதியாகப் பார்க்கிறேன் என்று சொன்ன வள்ளலார், ஆகியவர்களின் நீண்ட வரலாற்றை எடுத்துப் பார்த்தால், இதற்கிடையிலே வந்து மோதியிருக்கிற சம்பவங்களை, இவர்களுடைய தத்துவங்களை மறைப்பதற்காக எழுந்த சக்திகளை, கடைசியிலே அவர்கள் வென்றிருக்கிறார்களா? அல்லது நாம் வென்றிருக்கிறோமா? —நாம் எந்த அளவிலே வென்றிருக்கிறோம்? ஆண்டுக்கு ஒரு முறை இராசேசுவரி கல்யாண மண்டபத்திலே கூடி, வள்ளலார் விழாவைக் கொண்டாடுகின்ற அளவிலேதான் வென்றிருக்கிறோம் என்று எண்ணுகிறபோது, தயவு செய்து எங்களுக்கு நீங்கள் வழிகாட்டுங்கள்.

ஒரு தெளிவான பாதையைக் காட்டுங்கள். உலகத்திலே தத்துவங்களைப் பின்பற்றுகிற மதங்கள் வளர்ந்திருக்கின்றன, நாம் வளரவில்லை. முகமது நபி சொன்ன கருத்துக்களை ஏற்றுக் கொள்கிற, முஸ்லிம் மதம் வளர்ந்திருக்கிறது. ஏசுபிரான் சொன்ன தத்துவங்களை ஏற்றுக் கொண்ட, கிறித்தவ மதம் வளர்கிறது. புத்தருடைய தத்துவங்களை ஏற்றுக்கொண்டதனாலே, அங்கேயும் புத்த மதம் வளர்ந்து கொண்டிருக்கிறது. வள்ளலார் ஆகிய வழிகாட்டியினுடைய தத்துவத்தைப் பின்பற்றுகிற முறையிலே தயவு செய்து இருக்கின்ற கிரிதாரி அவர்களே, ஊரன் அடிகள் அவர்களே, முன்னாலே இருக்கின்ற பெருமக்களே, எங்களைப்

போன்ற ஒன்றுமறியாதவர்களுக்கு வழிகாட்டுங்கள்!

தமிழன் என்றைக்கோ சொன்னான். இளங்கோவடிகள் பாடினார். உலகத்தில் சூரியனைப் பார்த்து வணங்கக் கற்றுக் கொண்டது தமிழினந்தான். சூரியனை வணங்குகின்ற பாடலைத்தான் முதலில் ஆரம்பிக்கிறார் இளங்கோவடிகள். எனக்கு முன்னாலே பேசிய மகாலிங்கம் அவர்கள் தெரிவித்தார்கள். உலகத்திலேயே எந்த மதத்தினரும் ஒளியை வைத்துத்தான் வணங்குகிறார்கள் என்று. மற்றவர்களிடம் இருந்தா நாம் கற்றுக் கொண்டோம்? உலகம் உருண்டை என்று எத்தனை ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் சொன்னான் தமிழ்ப் புலவன், ''ஞாலம்'' என்று. இன்றைக்கிருக்கின்ற விஞ்ஞானத் தத்துவங்களை எல்லாம், தமிழன் என்றைக்கோ சொன்னான். சூரியன் இல்லையானால் உலகம் இல்லை என்று விஞ்ஞானிகளும் ஒப்புக் கொள்கிறார்கள். சர்வ மதத்தவர்களும் ஒப்புக் கொள்கிறார்கள். ''ஞாயிறு போற்றுதும், ஞாயிறு போற்றுதும்'' என்று பாடினவன் தமிழ்ப் புலவன் அல்லவா? அந்த வழியிலேதானே வருகிறார் வள்ளலார். பெயரை வேண்டுமானால் மாற்றிச் சொல்லியிருக்கலாம். ஏனென்றால் இந்த மக்களுக்கு எதையாவது மாற்றிச் சொல்லியாகவேண்டும்.

இந்த விழாவிற்கு நம்முடைய அருமை மகாலிங்கம் அழைக்கிறார்கள் என்று, சட்டசபை மேலவைத் தலைவர் மாண்புமிகு சிலம்புச் செல்வர் அவர்கள், என்னைத் தொலைபேசியிலே கேட்டார்கள். கேட்டார்கள் என்று சொல்வது தவறு. அவ்வளவு பெரியவனல்ல நான். எனக்கு ஆணையிட்டார்கள். இந்த விழா நடைபெறுகிறது. நீங்கள் எட்டாம் தேதி கலந்து கொள்ள வேண்டுமென்று. நான் வேறு நிகழ்ச்சிகளுக்கு ஒப்புதல் அளித்திருந்தேன். அதுவும் நம்முடைய அருமைப் பெரியவர் மகாலிங்கம் அவர்களுடைய பொள்ளாச்சியிலேதான். கடந்த இரண்டு நாட்களாக நிகழ்ச்சிகள். அந்தப் பொள்ளாச்சிக்குள்ளே மிதிக்கிறபோது மகாலிங்கம் அவர்கள் ஆற்றலும் திறமையும், எந்தக் காரியத்தை எடுத்தாலும் எடுத்து முடிக்கின்ற சிறப்பும், அங்கே பளிச்சிட்டுக் கொண்டிருக்கின்ற பாங்கினைப் பார்த்துப் பார்த்து, அவரை நினைவு கூர்ந்து கொண்டு தானிருந்தேன். அப்படிப்பட்டவர் நிகழ்த்துகின்ற இந்த நிகழ்ச்சியில் கலந்து கொள்ள வேண்டுமென்று, நான் அந்த நிகழ்ச்சியை ரத்து செய்துவிட்டு, நான் வருகிறேன் என்று ஒப்புக்கொண்டேன். ஒப்புதல் அளித்த பிறகு, நான் வள்ளலார் வாழ்ந்த வடலூருக்குச் சென்றேன். அங்கே அவைகளையெல்லாம் பார்த்தேன். மற்றும் இங்கே நீங்கள் தீர்மானங்களாகக் கொடுத்திருக்கும் இந்தக் கருத்துக்களைப் பற்றியெல்லாம், நான் முன்னமேயே அரசு அலுவலர்களோடு விவாதித்து விட்டேன் என்பதையும், நான் இங்கே தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

ஏனென்றால், இந்த மன்றத்தின் அவைக்கு முன்னாலே வந்து நிற்கின்ற தகுதியை நான் பெறுவதற்கு, ஒரு சதவிகிதமாவது அதைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமே! நான் ஏற்றுக் கொண்டிருக்கும் பொறுப்பை நிறைவேற்றுவதற்கு, என்னை அந்த அமைச்சர் என்ற காரணத்திற்காகத்தானே அழைக்கிறார்கள். இது எனக்குத் தெரியாதா? 52 ஆண்டுகள் நான் வாழ்ந்து கொண்டிருக்கிறேன். நான் பத்தாவது வயதிலேயே பொது வாழ்க்கைக்கு வந்தவன். 12வது வயதிலேயே படிப்பை முடித்து விட்டு ஓடியவன். ஆனால் இதுவரை எனக்கிருக்கிற பெருமை எல்லாம், எடுத்த காரியத்தை வெற்றிகரமாக முடிக்கிறவன் என்பது தான். இந்த நல்ல பெயரை வாங்கியிருக்கிறேன் சின்ன வயதிலிருந்து. அது எனக்கு என்னுடைய தாய் அளித்த சக்தி, அல்லது நான் ஏற்றுக்கொண்ட தூய நெறியான வாழ்க்கை என்று, நான் இங்கே தெளிவாகத் திடமாக உறுதியாகத் தெரிவிக்கின்ற ஆற்றலைப் பெற்றிருக்கின்றேன்.

நான் வள்ளலார் அவர்களை வணங்குகிறேனா இல்லையா என்பது அல்ல. ஆனால் அவர்கள் சொன்ன நெறியிலே வாழ்ந்து காட்ட வேண்டுமென்பதற்காக, ஒவ்வொரு நாளும் முயன்று கொண்டிருக்கிறேன். ஒரு காரியத்திலே வேண்டுமானால் நான் சிறிது பின்தங்கியவனாக இருக்கலாம், புலால் உண்பதிலே! அதிலே கூட நான் அதிக விருப்பம் காட்டுகிறவனல்ல. எங்கே போனாலும் புலால் புலால் என்று அலைபவனுமல்ல. எது கிடைத்தாலும் சாப்பிடலாம் என்று எண்ணுகிறவன்தான். ஒரு வேளை இனிமேல் எதிர்காலத்திலே கூட, நான் புலால் உண்ணாக் கொள்கையை மேற்கொள்ள முடியுமென்று கருதுகிறேன்.

ஆனால் நாங்களெல்லாம் வாழ்க்கையின் அடித்தளத்திலே பாடுபட்டு உழைத்து நெறிகளை வாழ்க்கையிலே அனுபவித்து வந்தவர்கள். 50 ஆண்டுக்காலம் என்னை இந்த மன்றத்திற்கு அழைக்கின்ற தகுதி பெற்றவன் இல்லை என்பதை உணர்ந்து கொண்டுதான், இன்றைக்கு அழைத்திருக்கிறார்கள் என்றவுடனே இதற்கான அடிப்படைக் காரணங்களை ஆய்வு செய்ய வேண்டுமென்று, நான் கடந்த 25ஆம் தேதி வடலூருக்குச் சென்றேன்.

அறநிலையத் துறை ஆணையர், துணை ஆணையர், மற்ற அதிகாரிகளையெல்லாம் அழைத்துக் கொண்டு, அங்கே சென்று பார்வையிட்டேன். இதற்கு முன்னாலே நம்முடைய மகாலிங்கம் அவர்கள் சில வேண்டுகோளை என்னிடத்திலே தந்திருந்தார்கள். அதைப் பற்றியெல்லாம் அங்கே விசாரித்தேன். இதற்கு அடிப்படையிலே சிக்கல் எங்கே எழுகிறது என்பதைக் கண்டுபிடிப்பதற்காக, அங்கே இருந்த ஊர்ப் பெரியவர்களை யெல்லாம் கலந்து பேசினேன். அங்கே அவ்வளவு விபரங்களையும் தெரிந்து கொண்டு, இதற்கும் மேலாகத் திரு ஊரன் அடிகள் எழுதிய இராமலிங்க அடிகளாரின் வாழ்க்கை வரலாற்றைக் கடந்த ஆறு நாட்களாகக் கையிலேயே வைத்துக்கொண்டு, கிடைக்கிற நேரங்களிலெல்லாம் கொஞ்சம் கொஞ்சமாகப் படித்து, இரவு

பத்தே முக்கால் மணிக்குப் போத்தனூர் ரயில் சந்திப்பிலே ரயிலேறி 12 மணி வரை படித்து முடித்தேன். அதற்குப் பிறகு டாக்டர் நடராசன் முதலியவர்களிடத்திலே யெல்லாம் விவாதித்து, இவ்வளவு முயற்சிகளையும் எடுத்துக்கொண்டு, இந்த மன்றத்தின் முன்னாலே நிற்பதற்கு ஓரளவிற்காவது என்னைத் தகுதி உள்ளவனாக மாற்றிக் கொண்டு, இங்கே நிற்கிறேன் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இங்கே ஆறு தீர்மானங்களை நிறைவேற்றி, இவற்றை அரசு நிறைவேற்ற வேண்டுமென்று கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள். இவற்றிலே ஒன்றும் கடினமான காரியமே இல்லை என்பதை நான் மிகத் தெளிவாகச் சொல்லிக் கொள்கிறேன். நான் முன்னாலே சொன்னதைப்போல், இதிலே இருக்கின்ற பல் வேறு விவகாரங்களையும், நான் முன்பே விவாதித்திருக்கிறேன். கடைசியிலே இருக்கிற ஆறாவது தீர்மானத்திலே மாத்திரம், கொஞ்சம் பொருளாதாரப் பிரச்னை இருக்கிறது என்ற காரணத்தினாலே, அதை அறிவிக்கின்ற உரிமை இல்லாத காரணத்தினாலே, அதற்கான முயற்சியை மேற்கொள்வேன் என்பதை, நான் இங்கே தெரிவித்துக் கொள்கிறேன்.

முதல் தீர்மானம், அறங்காவலர்களை நியமிக்கும்போது, அங்கே இருக்கிறவர்களை மாத்திரமே நியமிக்கக்கூடாது. மாநிலம் தழுவிய ஒரு பொது நோக்கத்தோடு நியமிக்க வேண்டுமென்கிற தீர்மானம். இது ஏற்கனவே என் துறையினாலே, என்னாலே எடுக்கப் பட்ட முடிவுதான் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். இதற்காகத் தான் சமீபத்திலே இந்து அறநிலையத்துறையின் சட்டத்திலே ஒரு திருத்தத்தைக் கொண்டுவந்து, கடந்த சட்டமன்றத் தொடரிலே நிறைவேற்றியிருக்கிறோம். இதுவரை 5 அறங்காவலர்களை ஆங்காங்கே இருக்கிற அதிகாரிகள் தேர்ந்தெடுத்து நியமிக்க வேண்டுமென்றிருந்ததற்கு, மாற்றுத் திருத்தம் கொண்டுவந்து, அந்த அறங்காவலர்களைத் தேர்ந்தெடுப்பதற்குக்கூட ஒரு குழு அமைக்கவேண்டுமென்று ஒரு திருத்தமும், அந்தக் குழுவும் அதிகாரியும் சேர்ந்து மூன்று உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும், இரண்டு உறுப்பினர்களை அரசாங்கம் நியமிக்க வேண்டுமென்ற உரிமையை அந்தத் திருத்தத்தின் மூலம் பெற்றுக் கொண்டிருக்கிறோம்.

அதற்குள்ள அடிப்படைக் காரணமே, ஏதேனும் பதவிக்காக விரும்பி அலைந்து கொண்டு திரிகின்ற மக்களிலே ஒரு பகுதியினர், என்றைக்கு விண்ணப்பம் கேட்கிறார்கள் என்று பார்த்துக்கொண்டே இருந்து விண்ணப்பத்தைப் போட்டு, வருகிற இன்ஸ்பெக்டரிடத்திலே தவறான தகவல்களையெல்லாம் தந்து, தங்களைத் தகுதியுள்ளவராக ஆக்கிக்கொண்டு, அரசாங்கத்திற்கும் இவர் தகுதியானவர்தான் என்ற பட்டியலைத்தந்து, சரி நியமித்துவிடுங்கள் என்று அரசாங்கம் சொல்ல, நியமித்த பிறகு தங்களுடைய சொந்த சொரூபத்தைக் காட்டுகின்ற முயற்சிகளெல்லாம் நடைபெற்று முடிந்த வரலாறு உங்களுக்குத் தெரியும்.

அப்படியெல்லாம் நடந்து விடக்கூடாது. சில பெரியவர்கள், பொது வாழ்க்கையிலே ஈடுபடுகிறவர்கள், ஒதுங்கியிருப்பார்கள். அவர்களை நாம் வேண்டி அழைத்து, தயவுசெய்து நீங்கள் இந்தப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளுங்கள். அறநிலையம் என்பது இந்த நாட்டிலே அறத்தைப் பாதுகாக்கவேண்டிய நிலையம். தர்மம் அதர்மமாக மாறிவிடுகின்ற சூழ்நிலையை அறநிலையங்களே உண்டாக்கி விடக் கூடாது. ஆகவே தகுந்த நல்ல பெரியவர்களை, வாருங்கள் என்று அழைக்கின்ற உரிமையை அரசாங்கம் வைத்துக் கொள்ள வேண்டுமென்றுதான், இரண்டு உறுப்பினர்களை அரசாங்கம் நியமிக்கவேண்டுமென்று சட்ட மன்றத்திலே சட்டத் திருத்தம் நிறைவேற்றப்பட்டு இருக்கிறது. இதைக் கூடச் சட்ட மன்றத்திலே கேட்டார்கள். யார் கேட்டார்கள் என்று கருதுகிறீர்கள். முன்னாலே இருந்த ஆட்சியைச் சார்ந்த உறுப்பினர்கள் கேட்டார்கள். 'ஓகோ ! உங்கள் ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களைப் போட்டுக் கொள்ள இந்தத் தீர் மானமோ?' என்று கேட்டார்கள். அவர்கள் தம்முடைய ஆளும் கட்சியைச் சார்ந்தவர்களைப் போடாமல், அறங்காவலர்களை நியமித்தவர்கள். அதனாலே அவர்களுக்குச் சந்தேகம் வந்தது. நான் தெளிவாகச் சொன்னேன். கடந்த ஓராண்டு காலம் முதலமைச்சர் தமது கையிலேயே இந்தத் துறையை வைத்திருந்தார் என்றால், இந்தத் துறையைப் பற்றி இந்த அரசு எவ்வளவு முக்கியமாகக் கருதுகிறது என்பதை, நீங்கள் நினைவிலே வைத்துக் கொள்ளவேண்டுமென்று சட்டமன்றத்திலே எடுத்துச் சொன்னேன். ஆகவே அப்படிப்பட்ட தீர்மானத்தை நிறைவேற்றுவதிலே அரசுக்கு ஒன்றும் அட்டியில்லை.

இரண்டாவது தீர்மானம் அதிகாரிகளை நியமிப்பது பற்றியது. நேற்று முன்தினம் மாலை இதே நேரத்தில் கோவையிலே ஏறத்தாழ எழுபது அறநிலையத்துறை அதிகாரிகளை, அழைத்து வைத்துப் பேசினேன். இதுவரை தமிழக அரசு வரலாற்றில், ஒரு அமைச்சர் அறநிலையத்துறை அதிகாரிகளை அழைத்துப் பேசியதாக வரலாறே கிடையாது. அவ்வளவு அக்கறை எடுத்துக் கொண்டிருந்திருக்கிறார்கள். பெரியவர்களெல்லாம் இந்தப் பொறுப்பிலே இருந்தார்கள். அது வேறு விஷயம். இதற்கு முன்னாலே கடந்த மாதம் ஒரு கூட்டத்திலே கலந்துகொண்டு நான் பேசினேன். அந்தக் கோவிலுக்கு நிர்வாக அதிகாரி என்று சொல்லப்படுகிற, அதுவும் முதல்தர அதிகாரியாக இருக்கிற ஒருவருக்கு, அந்தக் கோவிலுக்கு எவ்வளவு சொத்து இருக்கிறது என்பதே தெரியவில்லை. எவ்வளவு நிலம் இருக்கிறது ? அது எங்கே இருக்கிறது, என்று தெரியவில்லை. எவ்வளவு வீடு இருக்கிறது என்பதே தெரியவில்லை. என்றைக்கோ ஒரு நாள் பேரூர்க் கோவிலுக்குள்ள நூறு ஏக்கரை, ஏக்கர் ஒன்றுக்கு நூறு ரூபாய் குத்தகைக்கு விட்டிருக்கிறார்கள். ஆண்டு ஒன்றுக்கு 100- ரூபாய். எவ்வளவு பெரிய வருமானம் பார்த்தீர்களா! லட்ச ரூபாய் வருமானமுள்ள, மஞ்சள் விளைகிற நிலத்தை 50,000/- ரூபாய் குத்தகைக்குக் கொடுக்கிறார்கள் !

இங்கே நீங்கள் சொல்லுகிறீர்கள் வடலூர் நிர்வாக அதிகாரியைச் சில தகுதிகளுக்கு உட்படுத்த வேண்டுமென்று. சைவக் கோவில்கள் அனைத்துக்குமே இத் தகுதிகள் வரவேண்டுமா, அல்லவா? சைவத்தைப் போற்றுகிறவர்கள், சைவத்தைப் பின்பற்ற வேண்டுமா வேண்டாமா? சைவத்திலே சீவகாருண்யம் இருக்கிறதா? இல்லையா?

வள்ளலார் திருச்சபையிலே மாத்திரம் தானா, இந்த விதி? அறிஞர் அண்ணா அவர்கள் சொல்வார்கள், ''நம் மக்கள் இரட்டை வாழ்க்கை வாழ்கிறார்கள். அதனால்தான் இந்த நாடு முன்னேறவில்லை. எண்ணுவது ஒன்று, பேசுவது ஒன்று—நினைப்பது ஒன்று, செய்வது ஒன்று'' என்று. உன்னாலே முடியாது என்றால் சொல். ஏன் வேஷம் போடவேண்டும்? நாக்கு ஒன்றுதான். காது இரண்டு, கண் இரண்டு, கை இரண்டு, கால்கள் இரண்டு. நாக்கு மாத்திரம் ஏன் ஒன்று? உண்மையைப் பேச வேண்டும், உள்ளபடி பேச வேண்டும். எண்ணியதைப் பேசவேண்டும். ஒரு கண் போனால் இன்னொரு கண், ஒரு மூக்குத் துவாரம் அடைத்துக் கொண்டால் இன்னொரு மூக்குத்துவாரம். ஒரு காது அடைத்துக் கொண்டால், இன்னொரு காது. இருதயம் கூட நின்றுவிட்டால் வேலை செய்யலாம், மாற்று இருதயம் வைத்து. ஒரு கிட்னி போனால் இன்னொரு கிட்னி. எல்லாமே இரண்டு. ஏன் நாக்கு மட்டும் ஒன்று? அதை மறந்துவிட்டு, வாழ்க்கையையே நாம் ஏமாற்றிக் கொண்டிருக்கிறோம், வள்ளலாரை முன்னாலே வைத்துக் கொண்டு! தயவுசெய்து பெரியவர்களே எங்களுக்கு வழிகாட்டுங்கள். நாங்கள் உங்களுக்கு உபதேசம் செய்ய வரவில்லை!

இந்த நாடு எந்தத் திசைநோக்கிச் செல்லவேண்டும் என்று, நீங்கள் விரும்புகிறீர்களோ. அதைத் தெளிவாகச் சொல்லுங்கள். நான் அரசின் சார்பிலேயும் சொல்லுகிறேன். இந்த அரசு தமிழ்ச் சமுதாயத்தின் குரலை எதிரொலிக்க வேண்டுமென்று விரும்புகிறது. நாம் எந்தத் தத்துவத்தை நம் நெறியாக எடுத்துக் கொள்ள வேண்டும். தயவு செய்து சொல்லுங்கள்.

வள்ளுவர் நெறியா? வள்ளலார் நெறியா? எல்லாம் ஒத்த நெறியென்றால் அந்த நெறி போதுமென்று சொல்லுங்கள்! நாங்கள் ஏற்றுக் கொள்ளுகிறோம். ஏழை எளிய சாதாரண பாமர மக்களுக்கு நாங்கள் எடுத்துச் சொல்லுகிறோம்.

இந்தச் சமுதாயம் இனி மேலாவது ஒளிவு மறைவு இல்லாமல், திட்டவட்டமாக ஒரு பாதையை நோக்கிச் செல்லட்டும். அது வள்ளலார் பாதைதான் என்றாவது சொல்லுங்கள். நாங்கள் பின்பற்றுகிறோம். எங்களுக்கு அதிலே ஆட்சேபணையே இல்லை. 'ஒன்றே குலம், ஒருவனே தேவன்' என்று சொன்னால் அந்த ஒன்றே குலம் என்பது, இந்த மனித சமுதாயம்தான். ஒருவனே தேவனென்றால் அவன் அருட் பெருஞ் சோதியாக இருக்கிறான் என்று சொல்லுவதிலே ஆட்சேபணை இல்லை.

அறநிலையத்துறைக்குப் பொறுப்பேற்றுக் கொண்டிருக்கும் அமைச்சர் நான். ஆலயங்களுக்குள்ளே நுழைகிறபோது பயபக்தியோடு போகிறேன். என் உள்ளத்திலே நான் ஒரு பணிவை ஏற்படுத்திக் கொள்கிறேன். சத்தியத்திற்குக் கட்டுப்படுகிறேன். தர்மத்திற்குத் தலை வணங்குகிறேன். அவர்கள் தருகிற திருநீறைக் கையில் வாங்குகிறேன். நாற்பது ஆண்டு காலமாகிறது நான் நெற்றியிலே திருநீறு அணிந்து. திருநீறு அணிந்தால்தான் பக்தன் என்று சொன்னால், அதை நான் ஏற்றுக் கொள்ளவில்லை. அது என்னுடைய சொந்தக் கருத்து. ஆனால் உள்ளத்திலே சத்தியத்தை ஏற்றுக் கொண்டிருக்கிறேன், வாழ்க்கையிலே சத்தியத்தை ஏற்றுக் கொண் கொண்டிருக்கிறேன்.

மனிதன் எந்த அளவு சத்திய வழியிலே நடக்க வேண்டுமென்று பாடுபட்டுக் கொண்டிருக்கிறேன். நன்மை செய்வதை மனதாலே கூடத் தடுக்க எண்ணியதில்லை. நான் அப்படிப்பட்டவர்களோடு வாழ்ந்திருக்கிறேன். நடிப்பிசைப்புலவர் கே.ஆர். இராமசாமி, இன்றைக்குத் தமிழகத்தின் முதல்வராக இருக்கிற புரட்சித்தலைவர், இவர்களெல்லாம் சம்பாதிக்கிற செல்வத்தை அள்ளி அள்ளி வழங்குகிற வள்ளல் தன்மைக்குச் சொந்தக்காரர்கள். நம்முடைய பாரதியார் 'பகைவனுக்கருள்வாய் நெஞ்சே' என்று பாடினார். இவர்களெல்லாம் பாதகர்களுக்குக்கூட அருள்வார்கள். ஆனால் அந்த அருள்கிற உள்ளத்தின் குறுக்கே, நான் என்றைக்கும் நின்றதில்லை. ஏனென்றால் ஒருவனுக்குக் கொடுப்பதைத் தடுத்தால் அது மிகப் பெரிய பாவம். காரணம் அதை என்னால் கொடுக்க முடியாது. என்னால் கொடுக்க முடியாததைத் தடுப்பதும் பாபம்! ஆதலால் கொடுப்பதைத் தடுப்பது பாபம் என்ற தத்துவத்தில், அது வள்ளலார் வழியில் வந்தவன் என்ற காரணத்தினாலே, நான் கடந்த நாற்பதாண்டு காலம் இதுதான் நெறியான வாழ்க்கை, இதுதான் தெய்வபக்தி என்று நம்பிக் கொண்டிருக்கிறவன். 'உள்ளத்திலே ஒளி உண்டாயின் வாக்கினிலே ஒளி உண்டாகும்' என்ற அந்தத் தத்துவத்தை-வள்ளலாரின் தத்துவத்தை நீங்கள் பின்பற்றிக் கொண்டிருக்கிறீர்கள். நான் அதனால்தான் உங்களைத் தாள்பணிந்து கேட்டுக் கொள்கிறேன். இந்தத் தமிழ்ச் சமுதாயத்திற்கு வழிகாட்டுங்கள். ஆண்டுதோறும் விழா நடத்துகிறோம், சபை கூடுகிறோம், நாம் பேசி அறிஞர்களுடைய உரையை முடித்துவிடுகிறோம். நாளை நாம் இதைப் பின்பற்றுகிறோமா என்பதைத் தயவு செய்து எண்ணிப் பார்க்கக் கேட்டுக் கொள்கிறேன். இப்படிப்பட்ட மாநாடுகள் இதற்கு வழிகாட்ட வேண்டும்.

மூன்றாவது தீர்மானம், புத்தர் பெருமான் முதன்முதலாகத் தர்மோபதேசம் செய்த சாரநாத்தைப் பற்றிச் சொல்லியிருக்கிறீர்கள். சாரநாத் மாத்திரமல்ல, அதைவிட உலகத்திற்கு உபதேசம் செய்த அந்தப் புத்தர் பெருமானின் வழிவந்தவர் எங்கள் வள்ளலார் என்பதை நினைவுபடுத்தும் வகையில், நாம் சிறப்புறச்

செய்ய வேண்டும். 'ஏமாந்த காலத்தில் ஏற்றம் கொண்டோர்' என்று புரட்சிக் கவிஞர் பாடினாரே அப்படி, இன்றைக்கு யார் யாரோ வடலூர்ப் பெருவெளியின் நிலங்களுக்கு எந்தக் காரணத்தினாலோ உரிமை கொண்டாடி வருகிறார்கள். அவர்களின் உரிமை சட்டப் படி கிடைத்ததா? சட்டத்திற்கு மாறாக எடுத்துக் கொண்டதா? தெரியாது. என்றாலும் நாம் சட்டத்தை மீற முடியாது. சட்டத்திற்குத் தலைவணங்கி, சட்டப்படி அந்த நிலங்களை அரசு எடுத்துக் கொள்ள முடிவெடுக்க வேண்டும் என்பது மூன்றாவது தீர்மானம்.

தமிழகத்திற்கு வருகிற வெளி மாநிலத் தவரையெல்லாம் சென்னைக்குள் நுழைந்தால் வடலூருக்குச் சென்று வள்ளலாரைக் காண வேண்டும்; 'இந்தியா ஒரு புத்தரை மாத்திரம் தரவில்லை, வள்ளலாரையும் தந்தது' என் கின்ற அந்த உணர்வை நாம் உண்டாக்க வேண்டுமென்ற உணர்வு, இந்த அரசுக்கு இருக்கிறது. ஆனால் இவைகள் மாத்திரம் வள்ளலார் பெயரைக் காப்பாற்றாது என் பதைத் தயவு செய்து நீங்கள் மனதிலே வைத்துக் கொள்ளுங்கள். புத்தமதம் என்று சொல்லிக் கொள்ள உலகத்திலே எத்தனை கோடிப்பேர் உள்ளனர்! ஆனால் இங்கே அவர்களையெல்லாம் இழந்து விட்டோம். வள்ளலாரையும் நாம் இழந்துவிடாமல் காப்பாற்றப் பெரியவர்களே துணைபுரியுங்கள்.

அடுத்த தீர்மானம், வள்ளலார் பிறந்த மருதூர், கருங்குழி ஆகிய இவைகளையெல்லாம் சேர்த்து ஒரு எல்லை வகுக்க வேண்டுமென் பது. அந்தத் திட்டத்தையும், நாங்கள் ஏற்கனவே ஆலோசனையில் வைத்திருக்கி றோம் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆறாவது தீர்மானத்திலே மாத்திரம் பொருளாதாரப் பிரச்னை இருக்கிற காரணத் தினாலே, நிச்சயமாக நிதியமைச்சர், முதலமைச்சர் இவர்களுடைய அனுமதியைப் பெற்று நல்ல முடிவு செய்கிறேன்.

இன்றைய முதலமைச்சர், வள்ளலாரு டைய சீடர் என்பதை உங்களுக்கு நினைவு படுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன். அவருக்குப் ''பொன்மனச் செம்மல்'' என்ற பட்டத்தைக் கொடுத்ததே, நம்முடைய திருமுருக கிருபா னந்தவாரியார் அவர்கள்தான் என்பதை நினைவு படுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன். அவர்க ளெல்லாம் வாழ்க்கையிலே தாயை வணங்கு கின்ற தத்துவத்தைக் கைக்கொண்டவர்கள். அதுவும் தமிழ்ச் சமுதாயம் சொல்லித் தந்ததுதான். 'தாயிற் சிறந்ததொரு கோவிலு மில்லை' என்று நம்முடைய பெரியவர்கள் சொன்னதினாலே, நாங்கள் தாயை வணங்கு கிறோம். 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்று சொன்னதால்தான், தாயை வணங்குகிறோம். இது தவறு என்று எப்படிச் சொல்ல முடியும்? அப்படிப்பட்ட முதலமைச் சரை நீங்கள் பெற்றிருக்கிறீர்கள்.

நம்முடைய காலத்திலே, இந்தக் காலத் திலே, முதலமைச்சர் எதையாவது செய்து விட்டு, 'என்னுடைய பெயர் நிலைப்பதற் காகச் செய்தேன்' என்று சொல்லுகிற முதல மைச்சரை நீங்கள் பெறவில்லை. வள்ளலா ருக்காக நிலையம் கண்டால், அது வள்ளலாரின் பெருமையை நிலைநாட்டச் செய்ததே தவிர, இந்த முதலமைச்சர் கண்ட வள்ளுவர் கோட்டம், இந்த முதலமைச்சர் கண்ட வள்ளலார் நிலையம் என்று போடுவதற்காக அல்ல என்பதை, நான் இந்த மன்றத்திலே தெரிவித்துக் கொள்கிறேன். தென்காசியிலே சென்று பார்க்கிறீர்கள்! தென்காசிக் கோயிலை எழுப்பினானே பாண்டியன், அவன் அந்தக் கல்வெட்டிலே என்ன எழுதி வைத்திருக் கிறான்? நான் இந்தக் கோயிலை எடுப்பிக்கும் முயற்சியிலே ஈடுபட்டேன். அது என்னை மீறிய முயற்சியாக இருக்கலாம். ஆனால் என்னுடைய ஆவல், இங்கே காசியைப்போல, ஒரு பெரிய ஆலயத்தைக் கட்டித் தென்காசி என்ற பெயரிலே எழுப்புகிறேன். இதை முடித்துவிட்டால்-ஒருவேளை முடிக்காமல் போனால், இதிலே இருந்து ஒரு கல் விழுந்தால் அந்தக் கல்லை எடுத்து வைப்பதற்கு யாராவது முன்வந்தால், அவர்களுடைய காலடியை என் தலைமேல் வைத்துக் கொள் வேன் என்று பொறித்துவிட்டுப்போன பாண்டி யனைப் பெற்றது நம்முடைய தமிழகம்!

நினைத்திருந்தால் இராசராச சோழன் பெரிய கல்லைப் பொருத்தியிருக்கலாம். பிரகதீசுவரர் ஆலயத்தைக் கண்ட இராசராச சோழன் என்று பொறிக்கவில்லை. இன்றைக்கு நாம் பார்த்துக் கொண்டிருக்கிறோம். அப்படிப் பட்ட முதலமைச்சரை நீங்கள் பெறவில்லை. அவர் அமைதியாக இருப்பார். ஆர்ப்பாட்டம் அவருக்குச் சொத்தல்ல, ஆனால் பெரியவர் களின் கருத்துக்களைத் தலைமேல் தாங்கு கின்ற உணர்வு, அவரைவிட வேறு யாரிடத் திலேயும் நீங்கள் பார்க்க முடியாது.

வள்ளலார் வாழ்ந்த அந்தப் பூமியை, வெறும் காட்சிப் பொருளாக மாற்றும் எண்ணத்திலே யிருந்து ஒருபடி மேலேசென்று, உங்களிடத் திலே வணங்கிக் கேட்டுக் கொள்கிறேன். நாம் அவருடைய நினைவாலயத்தை உருவாக்கு கிறோம். இந்த நாடு அதைப் போற்ற வேண்டும் என்பதோடு மட்டும் நின்று விடாதீர்கள். இந்தத் தமிழ்ச் சமுதாயமே வள்ளுவர் வழி யிலே, வள்ளலார் வழியிலே வந்தது என்ற பெருமையை உருவாக்குவதற்கு, இந்தச் சமரச சன்மார்க்க சங்கம் பாடுபடவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். வணக்கம்.

卐卐卐卐卐卐卐卐

# ஆத்திசூடி

'வாகீச கலாநிதி'
திரு கி.வா. ஜகந்நாதன், M.A. அவர்கள்

அவ்வையார், சிறுவர்கள் எளிதில் அறிந்து மனப்பாடம் செய்து கொள்ளும்படி சில நீதி நூல்களை இயற்றியிருக்கிறார். சிறிய வாக்கியங்களால் ஆத்திசூடியைப் பாடி, பிறகு சற்றே பெரிய வாக்கியங்களால் கொன்றைவேந்தனைத் தந்து, அப்பால் வெண்பா வடிவில் வாக்குண்டாம், நல்வழி என்னும் இரண்டு நூல்களை இயற்றியருளினார். எல்லாச் செய்யுள்களையும்விட, வெண்பா எளிதில் மனனம் செய்வதற்கு உரியதாதலின், இரண்டு நீதி நூல்களை வெண்பா வடிவில் செய்தார்.

''வெண்பா இருகாலில் கல்லானை''

என்று ஒரு பாட்டில் வருகிறது. ஒரு வெண்பாவை இரண்டுமுறை சொல்லக் கேட்டால், அதை நினைவில் வைத்துக் கொள்ள முடியுமாம். இந்த நீதி நூல்கள் இளஞ் சிறுவர் சிறுமியர்களுக்காக இயற்றப்பெற்றவை என்றாலும், வாழ்வு முழுவதுக்குமே பயன்படும் நீதிகளை உடையவை அவை. பிற்கால வாழ்வுக்கு வேண்டியவற்றை இளம் பருவத்திலே அறிந்து கொள்வதனால், பிறகு வாழ்க்கையில் அவற்றின்படி நடந்து நலம் பெற முடியும். மாடு நிறையப் புல்லை உண்டு, பிறகு அசை போடுவது போன்றது இது.

ஆத்திசூடி, கொன்றைவேந்தன் என்னும் இரண்டிலும் அவ்வைப்பிராட்டியார் அகர வரிசையில் நீதிகளைச் சொல்கிறார். முதலில் பன்னிரண்டு உயிர்களை முதலில் கொண்ட நீதி வாக்கியங்களையும், பிறகு பதினெட்டு மெய்களை முதலில் பெற்றவற்றையும், அப்பால் உயிர் மெய்களை முதலில் உடைய நீதிகளையும் சொல்கிறார். தனி மெய் மொழிக்கு முதலில் வராது ஆகையால் அவற்றின்மேல் அகரத்தை ஏற்றி, 'கண்டு ஒன்று சொல்லேல்', 'ஙப்போல் வளை' என்பவற்றைப்போல்சொல்லுகிறார். அப்படியே மொழிக்கு முதலில் வராத எழுத்துக்களை, ''அழகலாதன செயேல்'' என்பதுபோல இரண்டாவது எழுத்தாக வைத்துச் சொன்னார்.

நான் இரண்டாம் வகுப்புப் படிக்கும்போது ஆத்தி சூடியைப் படித்தேன். அதே சமயத்தில் 'கிங் ரீடர்' என்ற ஆங்கிலப் புத்தகம் பாடமாக இருந்தது. அகரம் முதல் எழுத்துக்களை வைத்து ஆத்திசூடியை அவ்வையார் அருளியிருப்பதனால், அந்த நீதிகளை வரிசை பிறழாமல் நினைவில் கொள்ள முடிகிறது. அ என்ற எழுத்தையும் அதனோடு ஒரு நீதியையும் 'அறம் செய விரும்பு' என்பதனால் இளைஞன் நினைப்பூட்டிக் கொள்கிறான்.

ஆங்கிலப் பாடப் புத்தகத்தின் முதற் பாடம், எளிதாக வார்த்தைகளைக் கற்றுக் கொள்ளும் முறையில் அமைந்திருந்தது. இல்லை, அப்படி,-போ என்று படித்தேன். அவ்வையார் அகரத்தோடு நீதியையும் புகட்டினார். ஆங்கிலப் பாடமோ வெறும் சொற்களை மாத்திரம் கற்பித்தது. இரண்டாம் வகுப்புப் படிக்கும் மாணவன் காலையில் எழுந்து வாசலுக்கு வருகிறான். அப்போது யாரோ பிச்சைக்காரன், ''அம்மா! பிச்சை'' என்று வாசலில் நின்று கேட்கிறான். பையனுக்கு ஆத்திசூடியின் முதல் வாக்கியமாகிய 'அறம் செய விரும்பு' என்பது நினைவுக்கு வந்தால், ''அம்மா, பிச்சைக்காரன் வந்திருக்கிறான்; பிச்சை போடு'' என்று சொல்வான். ஆங்கிலப் பாடம் நினைவுக்கு வந்தாலோ, ''இல்லை, -அப்படி,-போ'' என்பதை எண்ணி, ''இல்லை, அப்படிப் போ'' என்பான். ஆங்கில மொழியின் குறைபாடு ஆகாது அது. அந்த மொழியில் பாடப் புத்தகம் எழுதியவர்கள் வெறும் எழுத்தையும் சொல்லையும் கற்பிக்க எண்ணினார்களே ஒழிய, அதைப் படிக்கிற பையன் கருத்தையும் அறிந்து நீதி முறையைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதைப் பற்றிச் சிந்திக்கவில்லை. அவ்வைப் பிராட்டியாரோ அதைச் சிந்தித்துப் பாடியிருக்கிறார்.

அகரத்தை நினைப்பூட்ட அடி என்ற சொல்லைச் சொல்லலாம்; ஆனால் அது நல்ல எண்ணத்தை உண்டாக்காது; அம்மி என்றும் சொல்லலாம்; அதில் நல்லதும் இல்லை, பொல்லாததும் இல்லை. ஆனால், அறம் என்ற சொல் நல்ல எண்ணங்களை உண்டாக்கும். அந்தச் சொல்லின் பொருள் குழந்தைக்குத் தெரியுமோ என்று கேட்கலாம். சொல்லிக் கொடுப்பவர் அதன் பொருளைச் சொல்லிக் கொடுப்பது பெரிய காரியம் அன்று.

ஆத்திசூடியில் மனிதனுக்குரிய உறுதிப் பொருள்களாகிய நான்கையும் ஒன்றன்பின் ஒன்றாக, இடையிடையே பிற நீதிகள் வந்தாலும், வரிசை பிறழாமல் சொல்லியிருக்கிறார் அவ்வை மூதாட்டியார்.

அறம் செய விரும்பு
பொருள்தனைப் போற்றிவாழ்
மெல்லியலாள் தோள்சேர்
வீடு பெற நில்

என்ற நான்கும் நான்கு உறுதிப்பொருள்களையும் சொல்கின்றன. அகராதி வரிசை பிறழாமல் அவற்றை முறையாக வைத்திருப்பதைக் கவனிக்க வேண்டும்.

ஆத்திசூடியில், ''திருமாலுக்கு அடிமை செய்'' என்ற நீதி வருகிறது. அதைக்கண்ட ஒருவர், ''அவ்வையார் திருமாலை மட்டுந்தானே சொல்லியிருக்கிறார்? சிவபெருமானைச்

சொல்லவில்லையே? ஏன் இந்தப் பட்சபாதம்?' என்று கேட்டார்.

''இந்த நூலின் பெயர் என்ன?'' என்று அவரைக் கேட்டேன்.

''ஆத்தி சூடி'' என்றார்.

''அந்தப் பேர் ஏன் வந்தது?'' என்று மறு படியும் கேட்டேன்.

''ஆத்தி சூடி அமர்ந்த தேவனை, ஏத்தி ஏத்தித் தொழுவோம் யாமே? என்று காப்புக் கூறித் தொடங்குவதனால் அந்தப் பெயர் வந்தது'' என்று விடை கூறினார்.

''அந்தக் காப்புச் செய்யுளை நீக்கி விட லாம் அல்லவா? அப்போது அறம் செய விரும்பு என்பதுதானே முதலில் நிற்கும்?'' என்று கேட் டேன்.

''ஆத்திசூடி என்ற நூலின் பெயரை அந்தக் காப்புச் செய்யுளை அடிப்படையாகக் கொண்டுதானே வைத்திருக்கிறார்? அதை எடுத்துவிட்டால் நூலின் பெயரே மாறி விடுமே?''

''அப்படியானால் அந்தக் காப்புச் செய் யுள் நூலுக்கு இன்றியமையாதது என்று சொல்லலாம் அல்லவா?''

''ஆமாம்!''

''அந்தக் காப்புச் செய்யுளில் வரும், ஆத்திசூடி அமர்ந்த தேவன் யார்?''

''சிவபெருமான்''

''நூலைத் தொடங்கும்போதே அந்த நூலினின்றும் பிரிக்க முடியாமல் முதல் உறுப் பாக அமைந்த அச்செய்யுள் சிவபெருமானைப் போற்றி ஏத்தும்போது, அவ்வையார் சிவனை மறந்தார் என்று சொல்லலாமா? முதலிலேயே ஆத்திசூடி அமர்ந்த தேவனாகிய சிவபெரு மானை நினைக்கச் செய்து, பிறகுதானே நீதி களைச் சொல்கிறார்?'' என்றேன். அன்பர் உண்மை உணர்ந்து உவகையடைந்தார்.

ஆத்திசூடியில் வரும் முதல் நீதி ''அறம் செய விரும்பு'' என்பது. ''அறம் செய்'' என்று சொல்லாமல், ''அறம் செய விரும்பு'' என்று ஏன் சொன்னார். இளம் பிள்ளைக்குரிய நீதிகளைச் சொல்லும் இந்தநூல் அந்தப் பரு வத்துக்கு ஏற்ற வகையில் அமைந்திருக்கிறது. அறம் செய்வதற்குப் பொருள்மட்டும் இருந் தால் போதாது. அறம் செய்பவன் மனத்தில் விருப்பத்தோடு செய்ய வேண்டும்.

''மனத்துக்கண் மாசிலன் ஆதல்; அனைத்தறன்;
ஆகுல நீர பிற''

என்ற திருக்குறள் இந்தக் கருத்தை வலியுறுத்து கிறது. அறம் செய்ய வேண்டும் என்ற விருப் பத்தை இளம் பிள்ளைகளின் உள்ளத்தில் புகச் செய்தால் அந்த விருப்பம் பசு மரத்தாணி போல அங்கே நிலை கொள்ளும். அந்த இளை ஞன் பெரியவனாகி வாழ்க்கையில் புகும்போது தன்னுடைய ஆற்றலுக்கு ஏற்றவகையில் அறம் செய்வான். எல்லாவற்றிற்கும் அடித்தளமாக இருப்பது விருப்பம் அல்லது சிரத்தை.

ஒருவனுக்கு ஒரு பொருளை ஈவதற்குப் பல காரணங்கள் உண்டு. உள்ளத்தில் விருப் பம் இன்றிக் கொடுக்கும் ஈகைகள் பல இருக் கின்றன. வேறு ஒருவன் கொடுத்துப் புகழ் பெறுகிறானே என்ற பொறாமையினால் கொடுப்பது உண்டு; இவனுக்கு இது கொடுத் தால் நமக்கு லாபம் உண்டு என்ற அவாவை அடிப்படையாகக் கொண்ட ஈகையும் உண்டு; கொடுக்கும்போது, கொடுத்துத் தொலைக்க வேண்டியிருக்கிறதே என்ற கோபத்தோடு கொடுப்பவர்களும் உண்டு; ''இந்தா, இதை வாங்கிக் கொண்டு தொலை,'' என்று கடுஞ் சொல்லைச் சொல்லிக் கொடுப்பவர்களையும் பார்த்திருக்கிறோம். இவை போன்ற ஈகை களில், மனமாரக் கொடுக்கும் விருப்பம் இராது. ஆதலின் உண்மையில் அவை ஈகை என்று சொல்வதற்குரியவை அல்ல. அழுக்காறு முத லியவற்றின் வெளியீடாகவே அவற்றைக் கொள்ள வேண்டும். இவற்றையெல்லாம் நினைந்தே வள்ளுவர்,

''அழுக்கா றவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்ற தறம்''

என்றார். இந்த நான்கும் இவைபோன்ற பிற வும் உந்த அறம் செய்தால், அறத்தால் உண் டாகும் நற்பயன் கிட்டாது. இத்தகைய பிற இயல்புகளுக்கெல்லாம் மாற்றாக, எதிராக, இருப்பது விருப்பம். 'உள்ளத்தால் பொய்யாது ஒழுகும்' ஒழுக்கத்தில், மனம் விரும்பி அறம் செய்தலும் அடங்கும்.

ஆகவே, எல்லாச் செயல்களுக்கும் மூல காரணமாக இருக்கும் மனத்தின் இயல்பைச் சுட்டி, ''அறம் செய விரும்பு'' என்றார் அவ்வையார்.

பொருளைப் பற்றிச் சொல்கையில், ''பொருள்தனைப் போற்றி வாழ்'' என்றார். 'பொருளைப் பாதுகாத்து வாழ்வாயாக' என் பது பொருள். முன்னோர் வழியாக வந்த பொருளும், தான் ஈட்டும் பொருளும் ஒருவ னுக்கு உரியவை. அந்த இரண்டையும் போற்றி வாழ வேண்டும். பொருளை மனம் கொண்ட படி செலவழிக்கக் கூடாது. கிடைத்தவற்றைக் கொண்டு செய்வன செய்து எஞ்சியதைப் பாது காத்து வைக்கவேண்டும். வருவாய் மிகுதியாக உள்ளவரும் அளவுக்கு மிஞ்சிச் செலவழிப்பத னால் ஓட்டாண்டி ஆகிவிடுகிறார்கள். சிறிய வருவாய் உடையவர்களும் அளவாகச் செல விட்டு வாழ்வதனால் முட்டுப்பாடின்றி வாழ முடிகிறது.

''ஆகாறு அளவு இட்டிது ஆயினும் கேடில்லை
போகாறு அகலாக் கடை''

என்று திருக்குறள் சொல்கிறது. ஆகவே பொருளை ஈட்டிக்காக்க வேண்டும். பொருளைப் புதைத்து வைத்துச் சேமிப்பதை அவ்வையார் சொல்லவில்லை. 'பொருள் உயர்ந்த பண்டம்; அதை அருமையாகப் பயன்படுத்தவேண்டும். நல்லவற்றைச் செய்யப் பயன்படுத்த வேண்டும். வருங்காலத்துக்கும் உதவும்படி அளவறிந்து செலவிடல் வேண்டும்' என்று இருத்தலே போற்றுதல். அப்படிப் போற்றினால்தான் நன்றாக வாழ முடியும். பொருளைப் பொத்தியும் வாழக்கூடாது; பொருளைத் தூற்றியும் வாழக்கூடாது. அதைப் போற்றி வாழ வேண்டும்.

இன்பமாகிய மூன்றாவது பொருளைச் செல்லும்போது, ''மெல்லியலாள் தோள் சேர்' என்கிறார். பெண்களை மெல்லியலாள் என்பர். வடமொழியில் அபலா என்பார்கள். அதற்குப் பலம் இல்லாதவள் என்று பொருள். மெல்லியல் என்பது அதைவிடச் சிறந்தது. மென்மையான உடலும் மென்மையான உள்ளமும் உடையவர்களே மெல்லியலார். இயற்கையிலே அவர்களுடைய உடல் மென்மை வாய்ந்தது. தாயாகப் பழுக்க வேண்டியவர்களாதலின் அவர்கள் உள்ளமும் இயல்பாகவே மென்மை வாய்ந்தது. செயற்கையால் உடலில் வன்மையை உண்டாக்கிக் கொண்டவர்களும், பொல்லாத குணங்களால் வன்மையாக உள்ளம் கொண்டவர்களுமாகச் சில மகளிர் இருக்கிறார்கள். அவர்கள் பெண்மையை இழந்தவர்கள். அவர்களை மணந்து கொள்பவர்களுக்கு வாழ்க்கையில் துன்பமே மிகும். ஆதலின் உடம்பிலும் உள்ளத்திலும் மென்மை உடையவர்களையே மணம் புரிந்து கொள்ள வேண்டும் என்ற கருத்தை, ''மெல்லியலாள் தோள்சேர்'' என்று புலப்படுத்தினார். 'தோள் சேர்' என்பது நாகரிகமான தொடர். ஆண் பெண் உறவைப் புலப்படுத்த வேறு சொற்கள் இருந்தாலும், நயமான சொற்களால் கூறினார்.

அடுத்து வருவது ''வீடு பெற நில்'' என்பது, ''வீடு பெறு'' என்று சொல்லவில்லை. அறம், பொருள், இன்பம் என்ற மூன்றும் இந்த உலகத்திலே பெறுவதற்குரியவை. வீடு என்பது அம்மையில் பெறுவது. வீடு பெறுவதற்குரிய சாதனங்களை, முயற்சிகளை, இந்த உலகத்தில் செய்ய வேண்டும். 'வீடு என்பது சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்தாகலின், துறவறமாகிய காரண வகையால் கூறப்படுவதல்லது, இலக்கண வகையால் கூறப்படாமையின், நூல்களால் கூறப்படுவன ஏனை மூன்றுமேயாம்' என்று பரிமேலழகர் திருக்குறளின் உரைப்பாயிரத்தில் சொல்வதைக் காண்க.

ஆகவே மனிதன் வீடு பெறுவதற்கு ஏற்ற நெறியில் ஒழுக வேண்டும்; அந்த ஒழுக்கத்தினின்றும் பிறழாமல் நிலையாக நிற்க வேண்டும். அவன் செய்யும் செயல்கள் யாவும் இறுதிக் குறிக்கோளாகிய வீட்டை அடையும் வகையில் அமையவேண்டும். அந்தக் குறிக்கோளை இளமைப் பருவத்திலேயே மேற்கொள்ள வேண்டும்.

''பாலனாய்க் கழிந்த நாளும்,
பனிமலர்க் கோதை யார்தம்
மேலனாய்க் கழிந்த நாளும்,
மெலிவோடு மூப்பு வந்து
கோலனாய்க் கழிந்த நாளும்
குறிக்கோள் இலாது கெட்டேன்.
சேலுலாம் பழன வேலித்
திருக் கொண்டீச் சரத்து நானே''

என்று அப்பர் சுவாமிகள் பாடுகிறார். பாலனாக இருக்கும் போதே குறிக்கோளை மேற்கொள்ள வேண்டும் என்ற கருத்தை முதலிலேயே வைத்துப் பாடுகிறார்.

ஆகவே இளைஞர்களுக்கு நீதி கூறவந்த அவ்வையார் குறிக்கோளைச் சுட்டிக்காட்டி, அதை அடையும் நெறியில் பிறழாமல் நிலையாக நின்று ஒழுக வேண்டும் என்று வற்புறுத்துகிறார். அதுவே, ''வீடு பெற நில்'' என்பது.

---

## திருவொற்றியூர் முருகன்

தேவா! திருவொற்றிச் சேவார் புதல்வ!என
நாவார வாழ்த்தி நடம்புரிவாய்!—ஆவா
வியந்து பிழைசெய்யும் நன்னெஞ்சே! வேலோன்
நயந்துன் எதிர்தோன்றும் நாள்! (1)

மன்னும் ஒருயானை ஊட, மறுயானை
தன்உதவி வள்ளி தடமுலைகள்—துன்னுவிப்ப,
ஒற்றி நகர்வைகும் வேலோய்! ஒருபெரிதோ
பற்றி எனைஆள் பரிசு? (2)

நமராய் இருந்து,பின் ஏதிலர் ஆவர்! நயமிலரும்
தமர்ஆவர் என்னில், தமர்பிறர் என்று தகவுசொல்லி
அமர்ஆடி நிற்றல் வறிதுகண் டாய்!அலை ஆழிஒற்றிக்
குமரா!என்று ஓதிக் குடந்தம்*கொண்டு ஏத்தக் குறிக்கொள்நெஞ்சே! (3)

—மறைமலை அடிகள்.

(*குடந்தம் : கைகூப்பி மெய்வளைத்தல்).

---

# காப்பது உன் கடமையன்றோ?

"கலைமாமணி"

திரு. நாரண. துரைக்கண்ணன் அவர்கள், சென்னை.

ஆறுபடை வீடுகளில் அடங்காத போரூரில்
அறுமுகமும் மலர்ந்திடவே அமர்ந்தருளும் பெருமானே!
மாறுபடு மனத்தினனாய் மயக்குற்று வந்துநின்றேன் ;
மண்ணுலக வாழ்வின்துயர் மாற்றிடத்தான் வருவாயே!
கூறுகெட்ட மக்கள்குலம் குணம்பெறுவ தெந்நாளோ?
குறிக்கோளொன் றில்லாமல் கொன்னேதான் வாழ்வாரே!
வேறெதிலும் சிந்தைசெலாது விழுமியதே சிந்தித்து
வினைபுரிய வாய்ப்பருளாய் ; வேல்கொண்ட வித்தகனே! (1)

பனைமரத்தில் உருப்பதித்துப் பன்னிரண்டு தோள்களுடன்
பால்வழியும் அறுமுகமும் அருள்விழிகள் ஈராறும்
வினையறுக்கும் வேல்மயிலும் வியப்புறவே காட்சிதந்து
வீறூர்ந்த சான்றோர்க்கு வியன்வாழ்வை வழங்கினையால்!
முனைமுகத்துப் பதுமனுடன் மொய்ம்புடனே போர்புரிந்த
மும்மலமே யுருவான முரட்டசுரர் அனைவருக்கும்
கனைகழற்கால் இணைகளையே காட்டியருள் பாலித்த
கருணையைத்தான் என்னசொல்வேன் ; கந்தனெனும் பெருமானே! (2)

பேதைமையே பிறப்பியல்பாய்ப் பேதித்து நிற்போர்க்குப்
பதுமபதந் தந்தருளி மெய்ஞ்ஞானம் வழங்கிடுவாய் ;
ஏதுதுணை உனையன்றி ; எளியனுக்குச் சார்புமிலை ;
எந்நாளும் உனைத்தொழுதே ஏற்றமுற எண்ணிடுவேன் ;
மாதிருவர் மகிழ்ச்சிகொள மணாளனாய்த் திகழ்வோனே!
மயக்கமெலாம் போக்கடித்து மாண்பயனை யளித்திடுவாய்!
கோதில்லாக் குணக்குன்றே! கோமளமே! குமராவோ!
குடிகாத்துக் குதூகலமாய் வாழ்ந்திடவே அருள்வாயே! (3)

வேறு

உன்னையே நம்பிவாழும் ஒருபற்று மில்லாஎன்னைக்
கண்ணையே காப்பதுபோல் காப்பதுநின் கடமையன்றோ?
மண்ணையே பெரிதெண்ணி மாய்கின்றார் மக்களெல்லாம் ;
பொன்னையே போல்நீயும் புடம்போட்டு ஆட்கொள்வாயே! (4)

சமரபுரிச் சண்முகனே! சதுர்மறைகள் தொழும்பொருளே
தமரென்று எவருமில்லை; தயாபரனே! புரந்திடுவாய்;
குமைந்திடுமென் மனத்துயரைக் குருபரனே! போக்கிடுவாய்!
இமைப்பொழுதும் உனைமறவேன் எழுத்தறியும் பெருமானே! (5)

—oOo—

# பேதையும் மேதையுமான சீதை

"முதுபெரும் புலவர்"
திரு. புரிசை. சு. முருகேச முதலியார், திருவண்ணாமலை.

(முற்றொடர்ச்சி)

மான் பின் சென்ற மணாளன் ஆகிய இராமனைப் போலத் தம்பியின் பெயரைக்கூறி 'இலட்சுமணா! இலட்சுமணா!' என்று ஓல மிட்டழைத்த மாரீசனின் குரல் ஒலியைக் கேட்டுச் சீதையார் வருந்தினார். உண்மை யுணர்ந்த இலக்குவனார், இவ்வொலி எனது அண்ணார் குரலன்று, அவரால் அடியுண்டு வீழும் தீயவன் தீமையால் அழைக்கும் குரல் என, ஆறுதல் கூறவும், அண்ணியார் கேட்க வில்லை. அவர் கடுமொழிகளைக் கூறிக் காட் டுத் தீயில் வீழ ஓடினார். அக் கடுஞ் செயலால் பதைப்புள்ள இளவல், அண்ணியாரைத் தடுத்து வணங்கி, யான் இதோ செல்கின்றேன் எனச் சொல்லலுற்றார் என்பன முன்னைய இதழ் களிற் கண்டோம்.

எஞ்ஞான்றும் துறவிகள் சூழ்ந்து நிற்கும் இல்லம், சனகனார் அரண்மனை. அத்துறவி களும், அரசர்க்கு ஒன்றை உணர்த்துவதற்காக அங்கு அடைகின்றதில்லையாம். அவர்கள் தங் களுக்கே அய்யமான பொருள்களை உணர்ந்து கொள்ளுவதற்காக, அங்கு அம் மன்னவனை அணுகுவது வழக்கமாம். அப்பெரிய ஞானதான இல்லத்தில் வளர்ந்த ஏந்திழை இந்தச் சீதை யார். அப்படியிருந்தும் பெரும் பேதையரா னார், மிக மேதையராக வளர்ந்த சீதையார்.

## "பேதைப்படுக்கும் இழவூழ்"

சீதை தான் தீயில் வீழ்வேன் என ஓடிய தீய செயலும், அத் தொடர்பில் சீதை இள வலை நோக்கிக் கூறிய கடுஞ்சொற்களும், ஓர் ஒல்காப் பெருந் தீயை உண்டுபண்ணின. அத்தீ, உடலைச் சுடுவதன்று, உள்ளங்களைச் சுடுவது. அது, தான் தோன்றிய இடத்திற்குள்ள துணை களையெல்லாம் தொலைத்து, முடிவில் பிறந்த இடத்தையும் பீடித்தழிக்கும் பெருந்தீயாகும். இங்கு விரித்துரைக்கும் தீ யாது? அவ்விடத்தில் சீதையின்பால் எழுந்த சீற்றமே, அத் தீ! தீயா னது தான் பற்றிய பொருளையும், அப்பொரு ளோடு தொடர்புள்ள எரிபொருள்கள் அனைத் தையும், தொடர்ந்து சென்று அழித்துவிடும். அதுவுமில்லாமல், அத்தீ, தான் தோற்றுவதற்கு ஏதுவான சிறு பஞ்சோ, விரகோ ஆகியவற் றைத்தான் முன்னர் அழிக்கும். அதுபோல கோபத் தீ, கோபங்கொண்டவரை முதலில் அழித்து, அக்கோபத்திற்கு ஆளானவரையும், அவருக்குத் தொடர்புள்ளவர்கள் அனைவரை யும் தொடர்ந்து அழிக்க முற்படும்.

இவ்வுலகத்தார், உயர்ந்த புகழ்படைத்த வர்களை எல்லாம், எனக்குச் சொந்தம், எனக்குச் சொந்தம் என்று உறவு கொண்டாடு வர். ஆனால், அவர், சிறப்பிற்கு ஏதுவான கடப்பாடுகளைச் செய்து, துன்பமுற்ற காலத் தில் ஒருவரும் துணை செய்தவர் அல்லர்! உல கத்தில் மேம்பாடுற்ற தலைவர்களையெல்லாம் ஊட்டி வளர்த்துக் காத்துக் கைவந்த செய்த வர்கள், அவர்களது தாயும் தந்தையும், அத் தாய்தந்தையரைச் சேர்ந்த மிக நெருங்கிய உற வினர்களுமேயாவார். ஆதலால் உறவினர் இந்த உலகமென்னும், பெருங்கடலில் நீந்தி விளையாடவும், தலையெடுத்துத் தனித்துக் கரைகாணவும், ஒரு தோணியாக அமைகின் றார்கள். உணர்வின்றி ஒருவருக்கு உண்டாகும் வெகுளி, அவரையும் அவருக்குப் பெருந் துணை யாக அடுத்திருப்பவரையும், அவ்வழி அவர் களுக்குத் துணை நின்று வரும் பல்கிய சுற்றத் தவரையுமே சுட்டொழித்துவிடுமாம். கடலில் செல்பவர்களுக்கு, அவர் ஏறிய தோணி தீப் பட்டுவெந்தால், தோணியிலிருந்தவர்களைக் கடல்நீர் என்ன செய்யுமோ, அதைத்தான் செய்யும் இனமற்றவர்கள் இருந்த உலகமும், "இன்னாது இனனில்லூர் வாழ்தல், அதனினும் இன்னாது இனியார்ப் பிரிவு" என்பன போன்றி ருக்கும் விளக்கங்களாலும், "சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும் ஏமப் புணையைச் சுடும்" என்னும் முதல் நூலினா லும், சீற்றத் தீயின் கேடுகள் தெளிவிக்கப்படு கின்றன.

இத்தகைய வெந் தீ, தேர்ந்து தெளிந்த சீதாதேவியினிடத்தில் பிறந்தது. மிகச் சின்னஞ் சிறுபொழுதிலேயே மிக மேதையாக விளங்கிய இப்பெருமாட்டி, இங்கு மிகப் பெரிய பேதை யாக நேர்ந்தது. அரண்மனைச் செல்வியாகிய சீதாதேவி, இன்று ஆரண்யச் செல்வியாக விளங்குகின்றார். எல்லா நலங்களுந் தனது கணவனே எனக் கருதும், ஏந்திழையார்க்கெல் லாம், இன்பமென்பது கணவனைவிட்டு அக லாமை ஒன்றேதானல்லவா? அவ்வின்பம் நாட்டைவிடக் காட்டில்தான் சீதையார்க்கு

மிகுதி. நாட்டில் அரசியல் நெறிகளின் வேலைகளுக்காகப் பிரியும் நேரங்கள், அல்லல்கள் பல உளவாம். அவ்வகைப் பிரிவும் அண்ணலுக்கு இங்கில்லை. ஆதலால், சீதையார் வாழ்க்கை நாட்டைவிடக் காட்டில் சிறந்துள தெனலாம். இவ்வுயரிய வாழ்க்கையைப் பன்னாள் இழக்க வேண்டிய காலம் வந்தது. அது சீதையாரைப் பேதையாராக்கிற்று. ''பேதைப் படுக்கும் இவ்வூழ் அறிவகற்றும் ஆகலூழ் உற்றக்கடை''. இவ்வூழ் எவ்வூழோ, அது வரலாற்று முடிவில்தான் விளங்கும். அதற்குள், சீதையின் தீவினை அவளைப் பேதையளாக்கிற்று எனப் பேசிவிடக் கூடாது. தக்கவரிடையே தவசல்கள் வரும் பொழுதெல்லாம் ஒரு விரைந்த முடிவிற்கு வந்துவிடக் கூடாது. பொறுத்திருந்தே அறிய வேண்டும். இவ்விதி கம்பரே விதிப்பது. ''எவ்வினை விளைந்ததோ?'' ஏவர் எண்ணமோ? செவ்விதின் ஒரு முறை தெரியும் பின்'' என உரைத்து விட்டதனால் அறியலாம்.

**சேர்ந்தாரைக் கொல்லுந் தீ :**

சீதைபால் தோன்றிய தீ எதிரில் இருந்த இளவலைப் பற்றிற்று. அத்தீ இலக்குவனார் உடலில் பற்றவில்லை, உள்ளத்தைப் பற்றிற்று. எரி பொருள்கள் முத்திறப்பட்டன. ஒன்று நெருப்புற்ற உடனே பற்றி அழிவது, ஒன்று ஊதிப் பற்ற வைக்கப் பற்றி நெடுநேரம் நிலைத்தழிவது, ஒன்று தன்னைத் தொடரும் தீயோடு போராடுவது. காய்ந்த புற்களில் தீப்பட்டால் உடனே தீ வானுற வளர்ந்து சற்று நேரத்தில் அணைந்துவிடும். கரியில் பற்ற வைப்பதானால் உமியைக் கூட்டித் துருத்தியிட்டு ஊத வேண்டும். ஆனால், அக்கரி நெருப்பு எளிதில் அணைவதில்லை. அது மிக ஆற்றலும் உள்ளது. கரி நெருப்பே இரும்பையும் கனிவிக்கும். இரும்பையும் ஈடழித்து விடும். கரி நெருப்பில் ஒரு கருங்காலி வயிர மரத்தைப் போட்டால், அது உடனே எரிந்து சாம்பலாகிவிடும் என எண்ண முடியாது. கருங்காலியை அழிக்கக் கருதும் தணல், அக் கருங்காலி வயிரத்தோடு போரிட வேண்டித்தான் வரும். அது நாள் கணக்காக, மாதக் கணக்காக, ஆண்டுக் கணக்காகக் கூட, அக் கருங்காலிக் கட்டையுடன் போர் செய்ய நேரும். தீயும் விடாது. கருங்காலியும் எரியாது. அந்நெருப்பு அவ் வைரக் கட்டையை எரித்து முடிக்கப் பல காலம் ஆகும்.

பெருங் காடுகளில் வாழும் மக்கள் தங்கள் வீட்டின் முன்னர் வயிர மரங்களை வெட்டித் தலைகீழாக நட்டு, அம்மரத்தின் தலைப்பில் முழு முயற்சி செய்து நெருப்பைப் பற்ற வைத்து விடுவார்கள். அந்நெருப்பு பல மாத காலங்கள் எரிந்து கொண்டே நிற்கும். அணைவதில்லை. அந்நெருப்பைக் கண்டால் விலங்குகள் இரவில் அவ்வீட்டின் பக்கமே வாரா. அணையாத அத் தீயால், விலங்குகளின் துன்பத்தைத் தடுத்துக் கொள்ளுவார்கள் வன வாழ்க்கையர். இங்கு சீதையின்பால் தோன்றிய சீற்றத் தீயோ மிக ஆற்றலுள்ளது. அது இனமென்னும் ஏமப் புணையைப் பற்றிச் சுட எழுந்துவிட்டது. ஆனால் அதற்கு எதிர்ப்பட்ட இலக்குவனார் இதயம், காய்ந்த புல்லாக இல்லை; கரியும் உமியுமாக இல்லை; அது ஒரு கருங்காலி வயிரமாக அமைந்துவிட்டது. தீயும் வல்லமையுள்ளது, எரிகரும்பும் வல்லமையுள்ளது. மூளாத்தீ பலக்கவில்லை, அணைந்துவிடவுமில்லை, உள்ளே கனன்று புகைகின்றது. ஆதலால் சீதையார் கடுஞ்சொற்களுக்கு விடையிறுக்கும் இளவலின் சொற்கள், கடுமையைத் தாங்கி வெளிவரவில்லை, துயரத்தைத் தாங்கித் துன்ப ஓசையாக வெளிவருகின்றன.

போகின்றேன் அடியனேன் பொருந்திவந்துகேடு
ஆகின்ற தரசன்றன் ஆணை நீர்மறுத்து
ஏகுஎன்றீர் இருக்கின்றீர் தனியிர் என்றுபின்
வேகின்ற சிந்தையான் விடைகொண் டேகினான்

இக் கவியிலுள்ள ஒவ்வொரு சொல்லும் கூர்ந்து நோக்கத்தக்கன. இராமபிரானிடத்தும் சீதாதேவியாரிடத்தும் இலக்குவனார் எவ்வண்ணம் நடந்து வந்தனர் என்பதனைத் தெளிவிக்கும் தகுதியது இது. ஏகுக என்றனை அதனால் யான் ஏகுகின்றேன் எனக் கூறியிருக்கலாம்.

''ஏகு என்றீர்'' எனச் சீதாதேவியைப் பன்மையாக அழைத்தும், தன்னை ''அடியனேன்'' எனவும் கூறுகின்ற இலக்குவனார், தமது முன்னவர்பால் வைத்த மரியாதை எத்தகையது? இராமபிரானை எனது அண்ணன் எனக் கூறாமல், ''அரசன்'' எனக் கூறிய சிறப்பு நாட்டிற்கெல்லாம் எற்றைக்கும் பொருந்துவதாகிய ஒரு பேரறத்தை விளக்குகின்றதாகும். அற்றைய முடியரசுக் காலத்திற்கும் இற்றைய குடியரசுக் காலத்திற்கும் கடைப்பிடிக்க வேண்டிய ஒரு சிறந்த கருத்து இங்கு விளக்கப்பெறுகின்றது. அரசனுக்குத் தம்பிமார் எனினும், தாரமே எனினும், அரசகட்டளைக்கு மாறி நடக்கக்கூடாது. நடந்தால் என்ன? எனக் கேட்கலாம். அறிவுள்ளவர்களும் அரசனுக்குச் சிறப்பளிக்க வேண்டியவர்களுமே மாறி நடந்தால், அவர்கள் காட்டிய வழியே முரடர்களும், ஆற்றலின்றி அடங்கி நிற்கும் பகைவர்களும், எளிதாக அரச நெறியைக் கெடுப்பார்கள். அப்படி அறநெறி கெட்டு மறநெறி தலை எடுக்கும்போது, முதல் முதலாகக் கற்புக்கு இடைஞ்சல் வரும். பிறகு பொருளுக்குத் தீங்கு வரும். இவ் இரண்டுங்கெட்டால் மானமும் வாழ்க்கையும் மாறி உலகமே அழியும். இப்படி உலகம் அழிவதற்குப் பெருங்குடி மக்கள் முன்னோடிகளாக நிற்கக்கூடாது.

இதனால்தான் சீதையாரை நோக்கிய இலக்குவனார், எனது அண்ணன் கட்டளை, உனது கணவன் கட்டளை என்னாது, ''அரசன் தன் ஆணை நீர் மறுத்து ஏகென்றீர்'' என விளக்கமாகக் கூறியது. இங்கே இலக்குவனார் தனது உரையைக் கேட்காமல் போனதற்காக வருந்தவில்லை. ''நான் மானைப் பிடித்து வருகின்றேன். நீ சீதையைக் காத்து நில்'' என அரசன் இட்ட கட்டளையை மீறி நடக்க அண்ணியார் இடும் கட்டளைக்காகவே வருந்தினார். காவலை விட்டுத் தான் அகன்றவுடனே

அல்லல் வரும் என்பதனை அழுத்தமாக உணர்ந் திருந்தனர் இலக்குவனார். அரச கட்டளையை மறுத்து நடக்குங்கால் கற்புக்கும் பொருளுக்கும் கேடு வருமெனக் கூறினோம். இங்கே பொருள் ஏதுமில்லை. துறவற வாழ்க்கை, இனி உள்ளது கற்புத்தான். அப் பெருங்கற்பிற்கே பேதுறவு நேரவருமென்பதனைப் ''பொருந்தி வந்து கேடு ஆகின்றது'' என்றனர். அரசர்க்கு அரசன் மகளாப் பிறந்து, அரசர்க்கு அரசன்மருமகளாக வந்த பெருமாட்டியார் தனித்திருந்த காலமே கிடையாது ஆதலால், அவரது தனிமைக்கு வருந்தினார் இலக்குவனார். ''பொருந்தி-வந்து- ஆகின்றது'' எது? கேடு. ஆகவே இச் சொற்றொடர், பொருந்தியகேடு-வந்தகேடு-வளருகின்றகேடு என முத்திறத்தனவாகி நிற் கின்றது. பொருந்திய கேடு, பொய்ம்மானை மெய்ம்மான் எனக் கருதி, அதன் மேலே வைத்த ஆசை. வந்தகேடு, கணவன் ஒலிபோல வந்த கயவன் குரலோசையை நம்பியதால் எழுந்த வெகுளி. வளருகின்ற கேடு, அவ் வெகுளியால் வந்த மயக்க உணர்வு. அது தனக்குள்ள ஆத ரவை அகற்ற முற்பட்டது.

இப்படி, ''காமம் வெகுளீ மயக்கம்'' இவை மூன்றும் ஒருங்கே வளர வந்ததனால், கேடும் வளர வழி வந்து விட்டது. கேடு பொருந்தி வந்தது என்னாமல், பொருந்தி வந்து கேடு ஆகின்றது எனக் கூறியதனால், கேடு வளருகின்றது எனக் கொள்ள நேர்ந்தது. கேடு வளருமானால், தளருவது எது? ஆக்க மல்லவா? சீதாதேவியை நெருங்கி வரும் ஆக்கச் சிதைவும், அதை உண்டாக்க முன்னிற் கும் வெகுளித் தீயும், முதலில் இளவல்மேல் பாய்ந்து, பிறகு இராமபிரான் மேல் பாய்ந்து, தொடர்ந்து பரத சத்துருக்கனர் மேல் பாய்ந்து அடுத்துப் பேரரசன் மனைவியரைத் தீய்த்து, பிறகு நகரமக்களையும் நாட்டு மக்களையுமே சாம்பலாக்க எழுதரும் பேராற்றல் படைத்தது, தேவியின் வெகுளித்தீயும் அதனடியாக வளரத் தலைப்படும் கேடும். அங்கு சானகியார் ஏவிய படி இளவல் அப்புறப்பட, காப்பகலும் சமயம் பார்த்துக் கரந்துறைந்த இராவணன் வஞ்சக உருவில் வந்து கவர்ந்து செல்ல, ஆண்டகை யும் இளவலும் வந்து பார்த்து அயர்தர, இடை யீடான பாடும் போரும் பத்துத் திங்களை ஓட்ட, குறித்திருந்த பதினான்கு ஆண்டுகளும் பறந்துவிட, அயோத்தியில் பரதனார் ''யான நிந்தகாலவரையறை அய்யனுக்கு அறிய முடியா தல்ல; எனதல்லலும் எங்கள் தாயார் தவிப்பும், அரசப் பெருமகன் அறியாதனவல்ல. ஏதோ கடத்தற் கரிய பகை வந்து அடுத்திருத்தல் வேண்டும்'' எனக் கலங்கி அழுதனன்.

''எனக்கியம்பிய நாளும் என்இன்னலும்
தனைப் பயந்தவன் நேயமுந் தாங்கியவ்
வனத்து வைகல் செய்யான் வந்தடுத்ததோர்
வினைக் கொடும்பகை உண்டென விம்மினான்''

இப்படி இங்குண்டான கேட்டினை, கால நீடிப் பினை ஒருவாறு உணர்ந்த ஒண்மையன் பரதன், தீ வளர்ப்பித்து அதில் வீழத் தொடங்கினன். அன்னை கவுசலை அலறிப் புடைத்து வந்து, பரதனைக் கட்டித் தழுவி உரைக்கின்றாள்;

''நீயீது எண்ணினையேல் நெடு நாடு எரி
பாயும் மன்னருஞ் சேனையும் பாயுமால்
தாயர் எம்மளவு அன்று தனி அறம்
தீயில் வீழும் உலகமும் தீயு மால்''

எனத் தடுக்க முயன்றனள். பரதன்,

'' தாய் சொல் கேட்டலும் தந்தைசொல்கேட்
டலும்
பாசத்து அன்பினைப் பற்று அற நீக்கலும்
ஈசற் கேகடன் யான் அஃது இழைத்திலேன்
மாசு அற்றேன் இது காட்டுவன் மாய்ந்து
என்றான் ''

இப்படி உரைத்த பரதன், தீயை வலம் வரு கின்றனன். அவனைத் தொடர்ந்து தம்பி சத்து ருக்கனனும் கவுசலையாதியரும் அமைச்சரும் அடியவர்களும் உலகத்தவரும் பேரெரியில் வீழ ஆயத்தராயினர். அப்போது பரதனை மறவாத வள்ளலின் மனோவேகத்தினும் புட்பக மும், அதற்கும் முந்தும் மாருதியும், முன்பின் னாகப் பறந்து வந்தனர். இடையில் பரத்து வாசன் விருந்தைவிடப் பரதனுக்குத் தரும் மருந்தே நல்லதெனப் புகுந்த அனுமன்,

'' அய்யன் வந்தனன்! ஆரியன் வந்தனன்!
மெய்யின் மெய்ய! நின் இன்னுயிர் வீடினால்,
உய்யுமே அவன்? என்று உரைத்து, உள்புகாக்
கையினால் எரியைக் கரியாக்கினான் ''

இப்படிப் பறந்து வந்த மாருதி, கரியாக்காமல் போனால், அவ்வெரி என்ன செய்திருக்கும்? ''சினம் என்னும் சேர்ந்தாரைக் கொல்லி-இனம் என்னும் ஏமப்புணையைச் சுடும்'' என்ற அற நெறியை உண்மையாக்கி, பின்னர் வள்ளலை யும், வள்ளலின் உடனாகத் தேவி சீதையை யுமே அழித்திருக்குமல்லவா, சீதையார்பால் இங்கு தோன்றிய வெகுளித் தீ? இத்தனையும் உறுதியாக வந்தே தீரும் என உணர்ந்த முன்னு ணர்வாளன் மனம், எப்படியிருக்கும்? வேகு மல்லவா? இதனால்தான் இலக்குவனார் ''வேகின்ற சிந்தையர்'' ஆனது. அதுவும் வெந்தசிந்தையல்ல, வேகின்றசிந்தை! ஈண்டுப் பற்றிய இத் தீ தான், கருங்காலி வயிரம் அனையது எனத் தாங்கும் வல்லமை மிகுந்த இளவல் மனத்தால், அவ்வளவு தாங்கியும், பஞ்ச வடியிலிருந்து அயோத்தி வரையில் பரந்து குடிமாள அடிகோலிவிட்டது. இலக்குவ னார் இப்படி வெந்து வேதனைப்படும் உள்ளத் தராயினும், முடிவில் வருகின்றேன் என விடை கொண்டு புறப்படும் மரபிற்கு உடன்பாடு உடையவராயினார்.

—தொடரும்.

# அறம்பொலியும் புத்தாண்டே ! வருக !

## (எண்சீர் விருத்தம்)

பூக்கட்டும் புத்தாண்டு மலரினது புதுமை
போகட்டும் நமைவிட்டுக் கொடியதெனும் வறுமை
நீக்கட்டும் அறியாமை; நிலைக்கட்டும் வாய்மை
நிலவட்டும் தமிழ்மக்கள் மனங்களிலே தூய்மை
காக்கட்டும் பூமகள் கன்னித் தமிழ் நாட்டை
கரையட்டும் மறம்மலியும் கழிவுமன்க் கோட்டை
தேக்கட்டும் தமிழர்தம் முகங்களிலே அன்பு!
தீரட்டும் வேற்றவர்கள் செய்திழைக்கும் வன்பு! *(1)*

பாடட்டும் அருளாளர் பாடல்களை; எங்கும்
பரப்பட்டும் தமிழகத்தின் பண்புகளை நன்று
ஆடட்டும் பரதத்தில் ஆரணங்கு; என்றும்
ஆளட்டும் தமிழ்த்தாய் அரியணையில் என்றும்!
நாடட்டும் எல்லோரும் நல்லொழுக்கம் தன்னை
நல்கட்டும் நல்லாசி கூறிநம் அன்னை
கூடட்டும் தமிழரினம் காக்கையினம் போன்று
குலவட்டும் கொஞ்சுதமிழ் பேசியே எஞ்ஞான்றும் *(2)*

செழிக்கட்டும் செந்நெலும் கன்னலும் கதலி
சேரட்டும், பெருஞ்செல்வம், பெரும்புகழ், பேறு
அழிக்கட்டும் அடர்காட்டை ஆக்கிடவே கழனி
அழகூட்டும் பசுமையைக் காண்போமே உழுது
விழிக்கட்டும் புத்துணர்ச்சி, அறச்செயல்கள் வெல்க!
விளங்கட்டும் தருமங்கள் மேன்மேலும் ஓங்கி!
அழியட்டும் கொடுமைஎலாம் அகலட்டும் பஞ்சம்
அறம் பொலியும் புத்தாண்டு அணியே! நீ வருக *(3)*

பாடல் இயற்றியவர்
**கவிஞர். சி. இராமசாமி**
திருத்தணிகை

# பாரத நூற் பண்போவியங்கள்

கவிஞர் திரு. மனசை ப. கீரன், B.A.,B.T.,

## 3. பாண்டுவின் தலைமுறை

சந்தனு செம்படவ மன்னனின் மகள் பரிமளகந்தியை மணந்தான். அதற்காகவே திருமணமும் புரிந்து கொள்ளாமல் பரிமளகந்திக்குப் பிறந்த சித்திராங்கதன், விசித்திரவீரியன் ஆகிய சகோதரர்கள் இருவரும் அரசாளுவதற்கு உதவியாகவும் இருந்து வந்தார் பீஷ்மர். சித்திராங்கதன் இறந்தபின் அரசாண்ட விசித்திர வீரியன் அம்பிகை அம்பாலிகை என்ற இரண்டு சகோதரிகளை மணந்து கொண்டான். ஏழு ஆண்டுகள் அன்போடும் இன்போடும் வாழ்ந்திருந்தான். பிறகு காசநோய் கண்டு இறந்துவிட்டான். இப்போது காசநோய்க்குச் சித்த மருத்துவத்திலும் ஆங்கில மருத்துவத்திலும் இருக்கும் சிறந்த முறைகள் அப்போது இல்லை போலும்!

அம்பிகை, அம்பாலிகை இருவரின் தாயான சத்தியவதி, மருமகன் இறந்துவிட்டதற்குப் பெரிதும் துன்பப்பட்டாள். பிறகு சத்தியவதி பீஷ்மருடன் பேசி யோசித்து வியாசரின் மூலம் குலத்தை வளர்க்க விரும்பினாள். அவ்வாறே வியாசரின் அருளால் அம்பிகையிடம் திருதராட்டிரன் பிறந்தான். அவனுக்குக் கண்ணில்லை. ஆனாலும் அவனிடம் பத்தாயிரம் யானைகளின் வலிமை இருந்தது. வியாசரின் அருளால் அம்பாலிகையிடம் பாண்டு தோன்றினான். அம்பாலிகையின் வேலைக்காரியிடம் வியாசரின் அருளால் தோன்றியவன், விதுரன். தரும தேவதையின் அவதாரமே விதுரன் என்பார்கள். அதற்கு ஒரு கதை இருக்கிறது.

மாண்டவ்யர் என்பவர் ஒரு மாமுனிவர். மனஉறுதியும் நூலறிவும் மிகுந்தவர் அவர். உண்மை தவறாதவர். தவமே வாழ்க்கையாக நடத்திக் கொண்டிருந்தார். அவருக்கு நகரத்திற்கு வெளியில் வனத்தில் ஓர் ஆசிரமம்.

ஒரு நாள் அவர் ஆசிரமத்திற்கு வெளியில் மரத்தடியில் மௌனமாகக் கண்களை மூடித் தியானத்தில் இருந்தார். அப்போது சில கொள்ளைக்காரர்கள் கொள்ளையிட்ட பொருள்களுடன் அந்தப் பக்கமாக ஓடி வந்தார்கள். அவர்களை அரசனின் சேவகர்கள் துரத்திக் கொண்டு வந்தார்கள். ஏன் தெரியுமா? அந்தக் கொள்ளைக்காரர்கள் அரண்மனைப் பொருள்களைக் கொள்ளையடித்துக் கொண்டு ஓடிவந்தார்கள். இந்த முனிவரின் ஆசிரமம்தான் நாம் ஒளிந்து கொள்வதற்குத் தகுந்த இடம் என்று நினைத்துக் கொண்டு, கொள்ளைக்காரர்கள் கொள்ளையிட்ட பொருள்களை ஆசிரமத்தில் ஒரு மூலையில் போட்டுவிட்டு உள்ளே ஒளிந்து கொண்டார்கள்.

துரத்திக் கொண்டு வந்த சேவகர்கள் கொள்ளைக்காரர்களைச் சுற்றுமுற்றும் தேட முயன்றார்கள்.

'முனிவரே! திருடர்கள் இந்தப் பக்கம் வந்தார்களே, பார்த்தீர்களா?'

பதிலே இல்லை. முனிவர் தியானத்தில் இருந்தார். ''சேவகரே! ஆளுக்கு ஒரு பக்கமாகச் சுற்றிலும் தேடுங்கள்'', என்று சேவகரின் தலைவன் கட்டளையிட்டான்.

சேவகர்கள் நாலாபக்கமும் சென்று தேடினார்கள். முனிவரின் ஆசிரமத்துள் சென்று தேடியவர்கள் திருடர்களைப் பிடித்துக் கொண்டு வந்தார்கள். அவர்களின் கைகளில் கொள்ளையிட்ட அரண்மனைப் பொருள்கள் இருந்தன. இன்னும் முனிவரின் தியானம் கலையவில்லை.

''ஓகோ, இவர்களைக் கொள்ளையும் அடிக்கச் செய்துவிட்டுத் திருடர்கள் உள்ளே இருப்பதையும் சொல்லவில்லையே! தியானம் செய்வது போல் மௌனம் சாதித்து விட்டால் விட்டுவிடுவேனா? நீதான் திருடர் தலைவன். இந்தத் திருடர்கள் உன் ஆட்கள்'' என்று கேலியும் கிண்டலும் தோன்றக் கூறினான், சேவகர் தலைவன்.

''முனிவர் ஆழ்ந்த தவத்தில் இருந்திருப்பார். திருடர்கள் உள்ளே போனதைக் கவனிக்காமல் இருந்திருக்கலாம்..........'' என்று இழுத்தான் ஒரு சேவகன்.

''ஆமாம், கண்டு பிடித்துவிட்டாய். வாயை மூடிக்கொண்டிரு. நீங்களெல்லாம் இவர்களைப் பத்திரமாகப் பார்த்துக் கொண்டிருங்கள் வந்து விடுகிறேன்'' என்று கொள்ளைப் பொருள்களுடன் ஒரு சேவகனும் சேவகர் தலைவனும் அரண்மனைக்குச் சென்றார்கள்.

'மன்னவா! திருடர்களைக் கையும் களவுமாகப் பிடித்துவிட்டேன். திருட்டுப் போன பொருள்களும் கிடைத்துவிட்டன. திருடர் தலைவன் முனிவர் போல வேடதாரியாக நம்மையெல்லாம் ஏமாற்றி வந்திருக்

கிறான். அவனை என்ன செய்யலாம் சொல்லுங்கள், தலைவா!'' என்று கூறினான் சேவகர் தலைவன். ''சூலத்தில் கழு ஏற்றுங்கள், அவனை'' என்று ஆணையிட்டான் அரசன்.

அரசனின் ஆணையை நிறைவேற்றிட விரைந்தான், சேவகர் தலைவன். அப்போதும் முனிவரின் தியானம் கலையக்காணோம். சூலத்தில், முனிவரைத் தியான நிலையிலேயே கழுவில் ஏற்றிவிட்டான். அதனால் அவரின் உயிரும் உடலிலிருந்து விரைவில் பிரியவில்லை. இதை அறிந்த முனிவர்கள் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள். ஆனாலும் அரசனின் ஆணைக்கு அஞ்சினார்கள். இதை அறிந்த மன்னன் வியப்பும் திகைப்பும் கொண்டு தன் பரிவாரங்களுடன் விரைந்தான். மன்னிப்புக் கோரிச் சூலக் கழுவிலிருந்து முனிவரைக் கீழே இறக்கச் சொன்னான். சூலத்திலிருந்து அவரைப் பிரிக்க முடியவில்லை. அதனால் அதை அரத்தால் ராவச் சொன்னான். சிறிது நீளம் இருக்கும்போதே, முழுவதையும் ராவுமுன், முனிவர் அப்படியேவிட்டு விடச் சொன்னார். அதனால் அவர் ஆணி மாண்டவ்யர் என்ற பேரும் பெற்றார்.

வியப்பாகப் பார்த்தவர்களுக்கு, ''இந்த ஆணி கழுத்தில் இருந்தால் சிவனுக்குப் பூப் பறிக்கும் குடலையை இதில் மாட்டலாமே!'' என்றார். பிறகு மாண்டவ்யர் தாம் பட்ட துன்பங்களுக்குக் காரணம் புரியாமல் தரும தேவதையிடம் போய்க் கேட்டார்.

''நீ சிறியவனாக இருந்தபோது தும்பிகளையும் வண்டுகளையும் பிடித்து வாலைக் கிள்ளி, முள்ளைக் குத்தி இம்சித்தாய். அதற்குத்தான் இந்தத் தண்டனை'' என்றது, தரும தேவதை. தும்பிகளையும் வண்டுகளையும் இம்சிப்பது தப்புத்தானே!

மாண்டவ்யர் சிரித்து விட்டு, ''சிறுவர்கள் என்னைப்போல் அறியாத பருவத்தில் 14 வயதுவரை செய்யும் வினை அவர்களை மட்டும் சேரக் கூடாது, பெற்று வளர்த்துப் படிப்பிப்பவர்களையும் சேர வேண்டும். எனக்குத் தண்டனை தந்த தருமதேவதையும் மனிதனாகப் பிறக்கட்டும்'' என்று சாபமிட்டார். அதனால் தருமதேவதை அம்பாலிகையின் வேலைக்காரிக்குப் பிள்ளையாக வியாசரின் அருளால் பிறந்தது. அவர்தான் விதுரர். இதனால்தான் விதுரர் தருமதேவதையின் அவதாரம் என்கிறோம்.

பீஷ்மர், பரிமளகந்தியின் பிள்ளை விசித்திர வீரியனுக்கு உதவியது போலவே, திருதராட்டிரன், பாண்டு, விதுரன் மூவருக்கும் எல்லாக் கலைகளையும் கற்பித்தார். கண்ணில்லாதவர்கள் அரசாளக்கூடாது என்றிருந்தாலும், பாண்டுவின் வேண்டுகோள்படி திருதராட்டிரனுக்கு முடிசூட்டினர். கண்ணில்லாவிட்டாலும் அரசனாகவும் அன்று ஆக்கினார்கள். அதைப் போலவே, இன்று நமக்கு எந்தக் குறை இருந்தாலும் கவலைப் படவேண்டாம். உழைத்து வாழ முயலவேண்டும். திருதராட்டிரனுக்குப் பாண்டு சேனாதிபதியாகவும், விதுரன் முதலமைச்சராகவும் இருந்து உதவினார்கள்.

—தொடரும்



## திருமுறைகளின் பெருமை

எத்தனையோ பலநூல்கள் எண்ணற்ற நிலையில்
இருக்கின்ற நம்தமிழில் என்றாலும், அவைகள்
அத்தனையும், தெய்வநல அருட்சிறப்பின் மிகும்நம்
அளப்பருஞ்சீர்த் திருமுறைகட்கு ஈடாக மாட்டா!
''இத்தரையில் இவைபோன்ற இலக்கியங்கள் யாண்டும்
இறையருளின் நலஞ்செழிப்ப இல்லைஇல்லை'' என்றே
வித்தகராம் மேனாட்டார் வியந்துமிகப் புகழ்ந்தார்!
மேதகைய திருமுறைச்சீர் விளம்பற் பாற்றோ?

—ந. ரா. முருகவேள்

# நால்வர் வழி

தவத்திரு குருகுலம் அழகரடிகளார்

மதுராந்தகம்.

**நால்வர் எதற்கு?**

சைவ சமயத்துக்கு நான்கு பேர் சமயக் குரவர்கள். ஒருவர் போதாதா என்று தோற்றும். மற்றச் சமயங்களுக்கெல்லாம் ஒவ்வொருவரே இருக்கும்போது இந்தச் சமயத்திற்கு மட்டும் எதற்காக நால்வர் என்று கேட்க நேரும். வைணவ நெறி, சிவ நெறியில் அடங்கியது. இரண்டும் சேர்ந்ததே சைவ சமயம். சைவக் குரவர்கள் நால்வர் என்றால், அவர்கள் அருளியது பன்னிரு திருமுறைகளாகின்றன. வைணவ ஆழ்வார்கள் பன்னிருவர் என்றால் அவர்கள் அருளியது நாலாயிரம் ஆகின்றது. இங்ஙனம் நான்கும் பன்னிரண்டும் ஒத்துவருதல் நினைவு கூரப்படும். இரண்டு நெறிகளும் ஒன்றுபட்டவை என்பதற்கு இக்கருத்து எடுத்துக் காட்டு.

சைவ சமயத்தில் முதல் குரவர் தென்முகக் கடவுள். அவருக்கு நான்கு பேர்தாம், அறம் கேட்டவர்கள். அவர்களுக்குச் சொன்ன அறமும், அறம் பொருள் இன்பம் வீடு என நான்காகும். வேதத்தின் உட்கருத்து அறம் பொருள் இன்பம் வீடாதலின், தமிழ் மறை எனப் பெயர் பெற்ற திருக்குறள் தமிழில் அமைந்து, ஆனால் பொது மறையாய் அறம் பொருள் இன்பம் வீடு நான்கையும் உலகுக்குத் தெரிவிக்கும் திருமறையாய் இருக்கிறது!

சிவ நெறிக்கு மட்டும் நால்வர் சமயக் குரவராய் விளங்குவதற்குக் காரணம், அந் நால்வரும் நான்கு வகையான, 'சீலம்,' 'நோன்பு', 'செறிவு', 'அறிவு' (சரியை கிரியை யோகம் ஞானம்) என, முழுமுதற் கடவுளோடு நால்வகை உறவு நிலைகளையும் மன்பதைக்கு விளக்கிக் காட்டவேயாம்.

இவ்வாறு சமய உண்மைகளைக் காட்டும் நால்வர் பெருமக்கள் தம் பாடல்களைப் போலவே வாழ்க்கையிலும் நடந்து உறவு முறைகளை மெய்ப்பித்து இருக்கிறார்கள். நால்வரும் நால்வகை உறவுகளும் உடையவரானாலும், ஒவ்வொரு உறவு முறையைச் சிறப்பாகப் பெற்றவர்களாய்த் திகழ்கிறார்கள். தொண்டு நெறி, அப்பருடையது ; ஒளி நெறி, ஞானசம்பந்தருடையது; பொதுமை நெறி, சுந்தரருடையது; தெளிவு நெறி மாணிக்கவாசகருடையது. இங்ஙனம் நால்வர் நெறிகளும் சிறப்புரிமை பெற்று தம் வாழ்க்கையால் நமக்கு வழிகாட்டுதலால், சைவ சமயம் நால்வரை ஆசிரியராகக் கொண்டிருக்கிறது.

**நால்வர் காலம்:**

நால்வரில் மாணிக்கவாசகர் 1600 ஆண்டுகளுக்கு முன் திகழ்ந்தவர். அப்பரும் சம்பந்தரும் அதற்கு 300 ஆண்டுகள் கழித்து 1300 ஆண்டுகளுக்கு முன் திகழ்ந்தவர்கள். அவர்களுக்குப் பின், 200 ஆண்டுகள் கழித்து, 1100 ஆண்டுகளுக்கு முன் சுந்தரர் விளங்கினார். இங்ஙனம் வேறு வேறு காலங்களில் தோன்றினாலும், ஒருவரையொருவர், மதித்துக்கொண்டு ஒரே கோட்பாடாய் விளங்கினார்கள். கடைசியாக விளங்கிய சுந்தரமூர்த்திகள் 63 அடியவர்களைத் தமது 'திருத்தொண்டத் தொகையால்' வழிபாட்டுக்கு வழங்கிச் சென்றார்கள்.

**நால்வர் கொள்கைகள்:**

நால்வரும் ஒரே வகையாய்க் கொண்ட கொள்கைகள் : (1) கொலை புலை மறுப்பு; (2) சாதி குலம் பாராமை;(3)அய்ம்பொறிகளை அடக்கி நுட்பமாக்கி அக உணர்வைப் பெருக்குதல்; (4) எல்லாம் வல்ல கடவுளைச் சிவம் என்னும் பெயரால் வழங்குதல்; (5) திருவைந்தெழுத்தும் திருநீறும் மேற்கொள்ளல்.

எல்லாம் வல்ல முழுமுதற் சிவத்தைச் சிவத்தின் ஆற்றல், உருத்திர மூர்த்தியின் வழியிற் கொண்டு, எங்கும் வழிபடுதல். கடல் நாகரிகத்தை விட மலை நாகரிகமே மிகப் பழமையானதாலும், குறிஞ்சித்திணையை முற்கொண்டு கூறுதலாலும், மலையைக் கண்டே மலைஉச்சியில் ஏறி அடுத்தபடி கடலைக் கண்டு நாகரிகம் பெருக்கினமையாலும், உருத்திர மூர்த்தியை மலைக் கொழுந்து என்று கொள்ளல்; அம்மையை முழுமுதற் சிவம் ஒப்பவே உருத்திர மூர்த்தியின் பிரியாக்கூறாக எண்ணுதல் ; அம்மையையும் பிள்ளையார் முருகரையும் பிரித்துப் பாடாமல் எப்போதும் எல்லா இடங்களிலும் சேர்த்தே பாடுதல். பிறர் துயர் களைவதையே முதல் நோக்கமாகக் கொள்ளல். திருக்கோயில் வழிபாட்டை விட மன்பதை நலங்களை முதன்மையாக எண்ணுதல்; திருக்கோயில்களுக்குச்

சென்று கோயில்கள் தோறும் பாடுதல். இசைப் பதிகங்களே பாடுதல். ஏதாவது வேண்டினால், எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளையே வேண்டுதல். திருவருளைப் பெறுவது தவிர உலகியல் வாழ்க்கையில் முதன்மை கொள்ளாமை. சிறு தேவரை வழிபடாமை. எல்லாப் பற்றும் அற்று, யான் எனது என்னும் தன்னுணர்வுகளும் நீங்கி, விளங்குதல். இவையெல்லாம் நால்வரின் ஒருமைப்பாடுகள். இங்ஙனம் ஒத்த கருத்தினராய் நால்வரும் விளங்குதலால், சைவ சமயத்துக்கு நால்வர் குரவராயினர்.

நால்வர் தீர்ப்பு:

மேற்காட்டிய கொள்கைகளெல்லாம், உலகத்தில் அருளியல் உலகியலோடு 'நல்வாழ்வு' 'வாழ விரும்புவோர் எவரும் பெறக் கூடியவை. ஆதலால், உலகத்தார் அனைவரும் இச் சமயக் குரவர் நால்வரையும் பின்பற்றுதல் நன்று. நால்வர் செய்யும் முடிவுகள் நமக்குத் தேவை. எவ்வளவும் சிந்தித்துக் கொள்வார் கொள்ளலாம்.

எத்தனைப் பக்கங்களாக வீடுகள் கட்டினாலும், எத்தனை திசைகள் இருந்தாலும் 'நாலா பக்கமும்' என்று சொல்வதே மரபு. சமய நெறி, ஏனை இலக்கிய நெறி, விஞ்ஞான நெறி, எல்லாவற்றையும் விடப் பெரிய நெறியாகும். இதுவே வாழ்வியல் நெறி. இந்நெறிக்கு நான்கு பேர் தீர்ப்பு உண்மைத் தீர்ப்பாகும். 'நம்பினார் கெடுவதில்லை நான்கு மறைத் தீர்ப்பு' என்பதும், நாலு பேர் போன வழியே நாமும் போதல் நல்லது என்பதும் பழமொழிகள்!

குருமார் சிறப்பு:

குருமார் அருள் பெற்றல்லது திருவருளை நேரே பெறுதல் இயலாது. மற்றச் சமயங்களின் மாணவர்கள், தம் குருவின் திறத்துப் பேரன்பு உடையவர்கள். சிவ சமயத்தார் அவ்வாறு சிறப்பது நன்று.

உடல் பொருள் ஆவியெல்லாம் குருமாரிடத்தில் ஒப்படைக்க வேண்டும். திருவருளை அவர் அளிப்பர். அதன்படி தேனிக்க வேண்டும்.

ஆகம் உயிர்பொருள்கொண்டு
அன்றே அருள் அளித்துச்
சோகமெனப் பாவிக்கச்
சொன்னாரைத்—தாகத்தோர்
வேண்டு பொழுதெல்லாம்
வேண்டுபொருள் வந்ததுபோல்
பூண்டுதொழ லன்றோ பொருள்.

''நால்வர் பொற்றாள் நமக்கு உயிர்த்துணை''.

---

# திருவாசகம்

தண்டமிழ் மொழியிற் சீர்த்தி
சான்றுயர் நூல்க ளாக,
எண்தரத் தக்க வற்றுள்,
எழில்**திரு வாச கம்**தான்,
திண்டிறல் திருக்கு றள்போல்,
சிறந்ததொல் காப்பி யம்போல்,
விண்தொட நிவந்து நிற்கும்,
அதன்சீர்யார் விளம்ப வல்லார்? (1)

திருக்குறள்போல் நீதிநூல்;
சிறந்துயர்தொல் காப்பியம்போல்
திருத்தமிகும் இலக்கண நூல்;
சிவஞான போதம்போற்
சுருக்கமிகும் மெய்ப்பொருள்நூல் ;
**தூயதிரு வாசகம்**போல்
உருக்கமிகும் பக்திநூல்,
உலகினில்வே றெங்கும்உண்டோ? (2)

இரும்புதரு மனத்தினையும் ஈர்த்துருக்கி,
எழிற்பொன்னாய் இனிது மாற்றிக்,
கரும்புதரு சுவைபெருக்கிக் கனிவுவளம்
**திருவாச கம்**தான் காட்டும்;
அரும்பெருஞ்சீர் அமைந்தொளிரும் அத்திருவா
சகநூலின் அருமைப் பாட்டை,
விரும்பிமிக இராமலிங்கர் முதற்சான்றோர்
மிகப்புகழ்ந்து வியந்து நின்றார்! (3)

**—ந. ரா. முருகவேள்**

---

# நம் ஆசாரியர்களின் திருநாவீறு

''மகா வித்துவான்''—''பத்மவிபூஷண்''

திரு. பி. ப. அண்ணங்கராச்சாரிய சுவாமிகள் அவர்கள், காஞ்சிபுரம்

திருமால் நெறிச் சம்பிரதாயத்தில், தமிழ் மொழியில் முதன் முதலாக அவதரித்த வியாக்கியான நூல், ஆறாயிரப்படி யென்பது. இது, திருவாய்மொழிக்குத் திருக்குருகைப் பிரான் பிள்ளான் இட்டருளின வியாக்கியானம். இதன் பெருமையை உபதேச ரத்தினமாலையில் மணவாள மாமுனிகள் ''தெள்ளாரும் ஞானத் திருக்குருகைப் பிரான், பிள்ளான், எதிராசர் பேரருளால்—உள்ளாரும், அன்புடனே மாறன் மறைப் பொருளை அன்றுரைத்தது. இன்பமிகுமாறாயிரம்'' என்ற பாசுரத்தினால் வெளியிட்டருளினர். ''இன்பமிகும் ஆறாயிரம்'' என்றது ஏற்றமிகு சிறப்புரை. அந்த வியாக்கியானத்திலுள்ள இன்ப மிகுதியை அநுபவ ரசிகர்களே அறியக்கூடும்.

இவ்வாறாயிரப் படிக்கு முன்பும் (நம் வைணவ சம்பிரதாயத்தில்) தமிழ் வியாக்கியான நூல்கள் (அல்லது) தமிழ் வசன நூல்கள் சில ஆசிரியர்களால் அருளிச் செய்யப்பட்டிருக்கவும் கூடும். ஆனால் அப்படி ஒரு நூலும் நமக்குத் தெரிய வரவில்லை. ஆறாயிரப்படியென்னும் வியாக்கியான நூலையே நமது சம்பிரதாயத்திற்கு முதற்றமிழுரை நூலாகக் காண்கிறோம். இந்நூல் அவதரித்து இன்றைக்கு ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகளாகின்றன. இது வெறுந் தமிழ் நூலேயன்று. மணிப்பிரவாள வியாக்கியானம் என்ற பெயர் பெற்றது.

அதாவது, தமிழ்ச் சொற்களும் சம்ஸ்கிருத வாக்கியங்களும் விரவி யெழுதப்பட்ட வியாக்கியானம் என்றவாறு. இந்தச் சேர்த்தியழகு வெகு அற்புதமானது. 'உபய வேதாந்தப் பிரவர்த்தகாசார்யர்கள்' என்று நம் ஆசாரியாகள் கொண்ட சிறப்புப் பெயரானது, இத்தகைய மணிப்பிரவாள நூல்களினாலேயே திண்மை பெறுகின்றது. மிகப் பழைய காலத்தில் சமண பௌத்தர்களின் மரபிலும் மணிப்பிரவாள நூல்கள் தோன்றியிருப்பதாகச் சில விமர்சகர்கள் சொல்லக் கேட்டிருக்கிறோம். அவற்றில் சாதாரண சம்ஸ்கிருத பதங்களும், தமிழ்ச் சொற்களும் கலந்திருக்கக் கூடுமேயல்லாது, ச்ருதி ஸ்மிருதி இதிகாச புராண வசனங்களும், காவிய நாடகாலங்கார சுலோகங்களும், பலவகைத் தமிழ்நூல் மேற்கோள்களும் கலந்து கமழப் பிரசத்தி இராது.

ஆறாயிரப்படிக்குப் பின், பெரியவாச்சான் பிள்ளை, வடக்குத் திருவீதிப் பிள்ளை போல்வார் இட்டருளிய வியாக்கியானங்களின் மாதுர்யமும் காம்பீர்யமும் அளவு மிகக் கடந்தது. ஆறாயிரப்படியானது சுருங்கிய தோரணையில் அமைந்த தாகையாலே அதில் பூர்வாசாரியர்களின் சம்வாதங்களோ, இதிகாச புராணாதி சுலோகங்களின் இன்சுவைப் பொருள்களோ காணப்பெறுதற்கு இடமில்லையாயிற்று. பெரியவாச்சான் பிள்ளையும் வடக்குத் திருவீதிப் பிள்ளையும் இட்டருளிய வியாக்கியானங்களின் சுவை மிகுதியைப் பற்றிப் பேசுவதற்கு நாமோ அதிகாரிகள்?

இவர்களின் சொல்நடை தொடையழகு 'என்னே! என்னே!' என்று கல் நெஞ்சையும் உருக்கவல்லது. இவர்களின் வியாக்கியானங்கள் திருவவதரிக்க வில்லையானால் ஆழ்வார்களின் திவ்வியப் பிரபந்தங்களுக்கு ஒருவிதமான மதிப்பும் இல்லையாகும்.

கம்பருடைய காலத்தில் திவ்வியப் பிரபந்தங்களுக்கு விசேஷமாக வியாக்கியானங்கள் அவதரித்திராமையாலே அவர் மூலத்தின் சுவையில் மாத்திரமே ஈடுபட்டு (சடகோபரந்தாதியில்) ''அந்தமிலா மறையாயிரத் தாழ்ந்த அரும் பொருளைச் செந்தமிழாகத் திருத்திலனேல் நிலத் தேவர்களும், தத்தம் விழாவுமழகுமென்னாம் குருகூர்வந்த பண்ணவனே'' என்று குழைந்து பேசிப் போனார். வியாக்கியானங்கள் அவதரித்த பின்பு, இவ்வுலகுக்கே விளைந்த பெரும் பாக்கியத்தை மணவாள மாமுனிகள் உபதேச ரத்தின மாலையில் 'பெரியவாச்சான் பிள்ளை பின்புள்ளவர்க்குந் தெரிய, வியாக்கியைகள் செய்வால்-அரிய, அருளிச் செயலாய்த் தறிந்து'' என்ற பாசுரத்தினால் பரமார்த்தமாக அருளிச் செய்தார்.

பலகாலம் ஆசார்ய சந்நிதியில் பணிவிடைகளைப் பண்ணிப், பலகால் கேட்டுக் கேட்டுணர வேண்டிய மேம்பொருள்கள் நிரம்பிய, அந்த அரிய பெரிய வியாக்கியானங்களைக் குருமுகமாகக் கேளாமல், ஏடுபார்த்து அந்வயிக்கப் புகுமவர்கள் ஒன்றும் அறியகில்லார்கள். அன்னவர்கள் அந்த வியாக்கியானங்களினால் இறையும் பயன் பெறார்களாதலால் 'அவற்றில் என்ன இருக்கிறது?' என்றும், 'நமக்குப் புரியாத நடையில் ஏதோ எழுதி வைத்திருக்கிறார்கள்' என்றும் சொல்லிப் போதுபோக்கக் கடமைப்பட்டவராயினர். உண்மையில் முற்காலத்தில் திவ்ய தேசந்தோறும் பலவிடங்களில் காலட்சேபங்கள் நடந்து கொண்டிருக்கும்; வியாக்கியான நூல்களை வைத்துக் கொண்டு பங்க்தியடைவே சேவித்துப் பொருள் சொல்வதும் கேட்பதுமாகிற பத்ததி இடையறாது நடந்து கொண்டிருந்தது. இக் காலத்தில்

அந்த பத்ததி மிக மிக விரளமாயிற்று. உபந்நியாசங்கள் சொல்லுவதும் கேட்பதுமே பெரும்பான்மையான பழக்கமாய் விட்டபடியால் முன்னோர் அருளிய நூல்களின் ஆழ்பொருள்களை யறிவார் மிகச் சிலரேயாயினர்.

பூருவர்கள் தங்கள் திவ்விய கிரந்தங்களில் அரிய பெரிய சாத்திரப் பொருள்களை இடுவது போலவே விநோதமான சில லௌகிக வார்த்தைகளையும் இடுவதுண்டு. அவற்றின் பொருளும் உபதேச கம்யங்களே ஒழிய ஏடு பார்த்துத் தெரிந்து கொள்ளக் கூடியவையல்ல. இந்த வியாக்கியானங்களுக்கு முன்னமே சிலர் அரும்பதவுரைகள் பணித்து அவையும் அச்சேறியிருக்கின்றன. அவற்றைப் பார்க்கும்போது அவ்வுரைகாரர்களுங்கூட, சிலவிடங்களில் சதாசார்ய பரம்பரையில் கேட்டிலர் போலும் என்று நினைக்க நேர்கின்றதென்று ஒரு சமயம் கோயில் பத்தராவி சுவாமி பணிக்கக் கேட்டதுண்டு. அந்த சுவாமி எடுத்துக் காட்டியருளிய ஒரு விஷயத்தையும் இங்குக் குறிப்பிடுகின்றேன்.

பெரிய திருமொழியில் (5-6-2) ''திருத்தண்கா லூரானைக் கரம்பனூருத்தமனை'' என்றவிடத்துப் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்தில் ''(கரம்பனூருத்தமனை) வழிக்கரையிலே திருவாசலுக்கொரு கதவிடாதே வந்து கிடக்கிறவனை'' என்று அருளிச் செய்யப்பட்டிருக்கிறது. திருவரங்கம் சமீபத்தில் 'உத்தமர்கோயில்' என்றொரு திவ்ய தேசமுண்டே ; அதற்குத்தான் திருக்கரம்பனூர் என்று திருநாமம். அத்தலத்து எம்பெருமான் உத்தமனென்று திருநாமம் வகித்திருப்பதை ரசோக்தியாக நிர்வகிக்கிறார் பெரியவாச்சான் பிள்ளை. ஒருவர்க்கும் ஒருபோதும் சேவை சாதியாத பெருமான் அதமன் ; வெகு சிரமத்தினால் சேவை சாதிக்கும் பெருமான் மத்யமன் ; அநாயாசமாக சேவை சாதிக்கும் பெருமான் உத்தமன் — என்று இவ்வகையான திருவுள்ளங்கொண்டு பெரியவாச்சான் பிள்ளை மேலே குறித்த நயவுரையை அருளிச் செய்திருக்கிறார். திருக்கரம்பனூர்த் திருமால், தேடிச் செல்ல வேண்டாதே வழிக்கரையிலே இருப்பது ஒரு சௌலப்பியம். அதற்குமேல் திருவாசலுக்குக் கதவிடாதே யிருப்பது மற்றொரு சௌலப்பியாதிசயம். பெரியவாச்சான் பிள்ளை காலத்தில் இந்த சந்நிதி செல்வக் குறைவினால் திருவாசலுக்குக் கதவிடப் பெறாமலிருந்தது (இருந்த கதவு பழுதாயிற்று; மீண்டும் புதிதாக அமைக்கப்படவில்லை போலும்!) அதனைச் செல்வக் குறையானதென்று கொள்ளாமல், மிக மேலாக எளிவரும் தன்மைக்கு ஏற்ற குணமாகக் குறித்தது, பெரியவாச்சான் பிள்ளையின் விலட்சண சாதுர்யமாகும். உலகில் பிரபுக்கள் தங்கள் மாளிகைகளுக்குப் பல கதவுகளிட்டுத் தாளிட்டு ஒருவர் கண்ணுக்கும் புலப்படாமல் கிடப்பதும், அர்த்திகள் வந்தால் வெறுத்துத் தள்ளுவதற்கு வாசலிலே பல சேவகர்களை இருக்க வைப்பதும், இப்படியாகத் தங்களுடைய துர்க்குணங்களைப் பரப்பிக் கொள்ளுகிறார்கள். கரம்பனூர்த் திருமால் அங்ஙனமின்றிக்கே திருவாசலுக்குக் கதவுமிடாதே வழிக்கரையிலே கிடந்து அநாயாசமாக சேவை சாதிக்கின்ற சௌலப்பியம் என்னே! என்று ஈடுபட்டும், இந்த குணாதிசயத்திற்காகவே உத்தமனென்று திருநாமமாயிற்றென்று காட்டியும், இன்சுவை மிக்க பங்க்திகள் பணித்திருக்கிறார் பெரியவாச்சான் பிள்ளை.

இங்கு அரும்பதவுரைகாரர் எழுதியிருப்பதென்னவென்றால், ''எல்லோரும் நடக்கும் வழியாகையாலே சேவிப்பார் மிகுகையால் கதவிட அவசரமில்லையென்று கருத்து'' என்றெழுதியுள்ளார். இதில் ஒரு சுவையுமில்லை ; பெரியவாச்சான் பிள்ளை திருவுள்ளம் பற்றின கருத்து மன்றிது. சேவிப்பார் மிகுகையால் கதவிட வாய்ப்பில்லை யென்னும்படியான நிலைமை திருக்கரம்பனூர்க்குப் பொருந்துவதும் அன்று. இங்ஙனே பல பல விஷயங்கள் எடுத்துக் காட்ட வேண்டியவை உண்டு. அரும்பதவுரை காரர்களிடத்துப் பட்சபாதத்தினால் சிலர், 'அவர் காட்டிய கருத்துத்தான் நன்று' என்று சாதிக்க முன் வருவரேல், அதற்கு நாம் பிரதிவாதம் செய்வோமல்லோம். கீர்த்தி மூர்த்தியான கோயில் பத்தராவி சுவாமி, பெரியோர்கள் கேட்டதைச் சாதித்தார் ; அதை இங்குத் தெரிவித்தபடி.

கண்ணபிரான் தூது சென்றான் என்ற குணவிசேஷயத்தில் ஈடுபட்டு ஆசார்யர்கள் பங்க்தியெழுதுகையில் ''கழுத்திலே ஓலை கட்டித் தூதுபோனவன்'' என்று எழுதுகிறார்கள். இப்பங்க்தியைப் பெரிய திருமொழி 2-2-2 வியாக்கியானத்திலும் ''மகாபாரதத்தால் தூது போனவன் ஏற்றஞ் சொல்லுகிறது'' என்ற சீர்வசநபூஷண சூக்தி வியாக்கியானத்திலும் மற்றுஞ் சிலவிடங்களிலும் காணலாம். கழுத்திலே ஓலை கட்டுத் தூது போகையாவதுஎன்ன? என்று பலரும் கேட்பதுண்டு; சமீப காலத்தில் ஒரு பண்டிதர் இதற்குப் பொருள் உபந்யசித்தார். ஏகாந்தமாகத் தூது செல்லாமல்' நான் தூது செல்பவன் காண்மின்' என்று ஒரு ஓலையிலே எழுதிக் கழுத்திலே தொங்கவிட்டுக் கொண்டு சென்றான், என்பதாக. இதுவன்று பொருள்.

முற்காலத்தில் (தபால் போக்குவரத்து இல்லாத நாளில்) அவசியமாகச் சில கிராமங்களுக்குத் தபால் அனுப்பவும் உடனே பதில் தெரிந்து கொள்ளவும் நேர்ந்தால் ஒரு நாயை வளர்ப்பார்களாம். அதற்குச் சில நபர்களைக் கிராமாந்தரங்களில் பழக்கி வைப்பார்களாம். அவசியமுள்ள சமயங்களில் ஒரு நீட்டோலையில் சமாசாரத்தை எழுதி அவ்வோலையை நாயின் கழுத்திலே கட்டி விடுவார்களாம். உடனே நாய் ஓடிச்சென்று குறிப்பிட்ட ஊருக்குப் போய் அந்த நபர் முன்னே நிற்குமாம். அவர் அதைத் தெரிந்துகொண்டு நாயின் கழுத்தில் கட்டியிருந்த ஓலையை எடுத்துப் பார்த்துச் செய்தி அறிந்துகொண்டு பதில் எழுதி அந்த நாயின் கழுத்திலேயே கட்டிப் போகவிடுவாராம். இவ்விதமாகத் தபால் போக்குவரத்து ஒன்று நடந்து கொண்டிருந்தது. இந்த 'சுவவ்

ருத்தியைக் கண்ணபிரான் சுவவ்ருத்தியாகக் கொண்டு தூது நடந்தானே' என்று ஆசாரியர்கள் உள்குழைந்து எழுகிறபடி. தூது செல்லும் போது கண்ணபிரான் தன் கழுத்திலே ஓலை கட்டிக் கொண்டு எழுந்தருளினதாகப் பொருளன்று. உபமான ரீதியில் எழுதப்பட்ட பங்க்தி இது.

சுவாவானது கழுத்திலே ஓலை கட்டிச் செல்வதுண்டே, அப்படிப்பட்ட இழிவான ஜந்துவின் செயலை அந்தோ! பராத்பரன் செய்தான் காணும்! என்று இவ்வளவு பொருளை உள்ளடக்கி ''கழுத்திலே ஓலை கட்டித் தூது போன ஏற்றம்'' என்று சுருக்கமாக எழுதினார்கள் ஆசாரியர்கள். இப்படிப்பட்ட பங்க்திகள் நமது சம்பிரதாய நூல்களிலே பல நூற்றுக் கணக்கிலுள்ளன. இங்ஙனம் நுட்பமாகவும் திட்பமாகவும் பற்பல அரிய பெரிய பொருள்களை விளக்கியருளும் நம் ஆசாரியர்களின் திருநாவீறு, மிக மிக விலட்சணமானது.

* * *

# "ஒன்றேன்றிரு: தெய்வம் உண்டு என்றிரு"

தெய்வ நம்பிக்கையும், தெய்வ சிந்தனையும், தெய்வ வழிபாட்டுத் தியானமும், மக்களாகிய நம்மனோரின் வாழ்க்கைக்கு மிக்க பயன் அளிப்பனவாகும். இவ்வுண்மையினை உலகப் பேரறிஞர்கள் பலர், இந்நாளிற் பெரிதும் உணரத் தலைப்பட்டு வருகின்றனர். உலகப் புகழ் பெற்ற மனஇயல்நூற் பேராசிரியரும், மனநோய் மருத்துவரும் ஆகிய கார்ல் கஸ்டாவ் யங் (Carl Gustav Jung) என்பவர் குறிப்பிடும் பின்வரும் செய்தி இங்கு நாம் பெரிதும் கருதி யுணர்தற்கு உரியது.

''கடந்த முப்பது ஆண்டுகளாக உலக நாடுகள் அனைத்திலும் உள்ள மக்கள் பலரும் என்பாற் கலந்து ஆய்வுரை கேட்டுள்ளனர். எத்துணையோ நூற்றுக்கணக்கான பிணியாளர்களுக்கு, யான் மருத்துவம் புரிந்துள்ளேன். அவர்களுள் மிகப் பெரும்பாலோர் 'புரொட்டஸ்டண்டுகள்'. ஒரு சிறுபான்மையினர் யூதர்கள். கடவுளை நம்புகின்ற கத்தோலிக்கர்களோ, ஐந்து அல்லது ஆறு பேர்களுக்கு, மேற்படாதவர்களே ஆவர்.

என்னுடைய பிணியாளர்கள் அனைவருள்ளும், வாழ்க்கையின் இரண்டாம் பகுதியில், அதாவது முப்பத்தைந்து வயதுக்குமேல், தமது இன்னல்கள் தீருவதற்கு உரிய இறுதி வழியாகத், தமது வாழ்க்கையிற் சமயவுணர்வு கைவரப்பெறுதலைக் கொள்ளாதவர்கள் ஒருவராவது இல்லை.

அவர்களில் ஒவ்வொருவரும் நோயுற்றதற்குக் காரணம், உயிர்ப்புடைய ஒவ்வொரு சமயமும், அவ்வக் காலத்தில் தன்னைப் பின்பற்றி ஒழுகுகின்ற மக்கள் அனைவருக்கும் தருகின்ற மனநிறைவு ஆகிய வாழ்வியல் நல்லுணர்ச்சியினை, அவர்கள் பெற இயலாமல், இழந்துவிட்டமையே யாகும். மீண்டும் சமயவுணர்வு கைவரப் பெறுமல், அவர்களில் ஒருவராவது உண்மையில் தம்முடைய பிணிதீரப் பெற்றிலர்''

இதுகாறும் கூறிவந்த சிலவற்றால், தெய்வ சிந்தனையும் தியானமும், மக்களின் வாழ்க்கைக்கு எத்துணையளவுக்கு இன்றியமையாதவை என்பது, வெள்ளிடை விலங்கலாய்த் தெள்ளிதிற் புலனாகும். ஆதலின் நாம் அனைவரும் தெய்வ வழிபாட்டு நெறிகளிற் சிறப்புற ஈடுபட்டு, வையத்து வாழ்வாங்கு வாழ்ந்து, உய்ய முயலுவோமாக:

ஒன்றென் றிரு; தெய்வம் உண்டென் றிரு;
உயர் செல்வம் எல்லாம்
அன்றென் றிரு; பசித் தோர்முகம் பார்;
நல் அறமும், நட்பும்
நன்றென் றிரு: நடு நீங்கா மலே
நமக்கு இட்டபடி
என்றென் றிரு: மனமே! உனக்கே
உபதேசம் இதே!

—பட்டினத்தார்.

* "During the past thirty years, people from all the civilized countries of the world have consulted me. I have treated many hundreds of patients, the large number being Protestants, a smaller number of Jews and not more than five or six believing Catholics.

Among all my patients in the second half of life, that is to say, over thirty-five years, there has not been one, whose problem in the last resort was not that of finding a religious outlook on life.

It is safe to say that every one of them fell ill, because he had lost that which the living religions of every age, have given to their followers, and none of them has been really healed who did not reagain his religious outlook".

—**Prof. Carl Gustav Jung.**
Modern Man in Search of a Soul, P. 264.

Quoted also by —**Dr. S. Radhakrishnan,**
in Religion in a Changing World, P. 53.

# திருநாளைப் போவார்

'செந்தமிழ்ச் செம்மல்'

பேராசிரியர் திரு. அ. ச. ஞானசம்பந்தம், M. A.,

சென்னை.

ஏயர்கோன் கலிக்காமர் நம்பியாரூரராகிய சுந்தரமூர்த்தியிடம் வெறுப்புக் கொண்டு அவரைக் காணவும் மறுக்கிறார். ஆனால், அவருக்கு வந்த சூலை நோயை நம்பியாரூரர் வந்துதான் தீர்க்கமுடியும் என இறைவன் கன விடைக் கூறியதற்கு ஏயர்கோன் இறுக்கின்ற விடை, வியப்பையும் அச்சத்தையும் விளைவிக் கின்றது.

''எம்பிரான்! எந்தை தந்தை
தந்தைஎம் கூட்டம் எல்லாம்
தம்பிரான் நீரே என்று
வழிவழிச் சார்ந்து வாழும்
இம்பரின் மிக்க வாழ்க்கை
என்னைநின்று ஈரும் சூலை
வம்பென ஆண்டு கொண்டான்
ஒருவனே தீர்ப்பான் வந்து?''

''மற்றவன் தீர்க்கில் தீராது
ஒழிந்துஎனை வருத்தல் நன்றால்''

—(ஏயல்-392.)

உயிர் போக, வாட்டி வருத்துஞ் சூலையை நம்பியாரூரன் வந்து தீர்ப்பதினும் அது தீராது இருத்தலே நன்று என்று பகரும் நெஞ்சுரம் தான் இவர்களை அடியார்களாக ஆக்குகிறது. அதுவும் வந்து கூறுபவன் சாதாரண மனிதன் அல்லன்! இறைவனே கூறுவதானாலும் தம் கொள்கையினின்று பிறழக் கூடாது என்று நினைப்பவர்கள் இவ்வடியார்கள். இத்தகைய ஒரு பிடிவாதம் சரியா தவறா என்பது இங்கு வினாவன்று. இதனைத் தவறு என்று கூறுகிற வர்கள் பெருநிலையைப் பற்றி அறியாதவர்கள். அடியார்கள் இத்தகைய நெஞ்சுரம் கொண்டி ருந்தமையால்தான் செயற்கரிய செய்ய முடிந் தது. உலகத்தில் மாபெரும் காரியங்களைச் சாதித்தவர்கள் அனைவருமே இத்தகைய உரம் வாய்ந்தவர்கள்தாம். இதனை விளங்கிக் கொள்ள முடியாதவர்கள் அடியார்களையும் மற்றப் பெரியார்களையும் 'பிடிவாத குண முடையார்' என்று கூறுவர். அதுபற்றி அடியார் கள் என்றுமே கவலைப்படுவதில்லை.

இந்த அடிப்படையை மனத்துட்கொண்டு நந்தனாரின் மனநிலையையும் செயல்களையும் நினைத்துப் பார்க்க வேண்டும். சிதம்பரத் திற்குப் போகலாமா வேண்டாமா என்று பல நாள் சிந்தனையிலேயே கழித்து விட்ட நந்த னார் ஒரு வகையாக மனத்தில் திடங்கொண்டு சிதம்பரத்திற்கு வந்தே விட்டார். வந்தும் அவருடைய பிரச்சினை தீர்ந்தபாடில்லை. தில்லையின் எல்லையை அடைந்த பெரியார் அங்கேயே வணங்கி எழுந்தார். ஊர் முழுவதும் வேள்வி செய்வதால் உண்டாகிய புகையும், மடங்களில் நெருக்கமும் கண்டார். கண்ட வுடன் என்ன நினைவு தோன்றிற்று? 'அல்கும் தம் குலம் நினைந்தே அஞ்சி அணைந்திலர் நின்றார்' என்கிறார் ஆசிரியர்.

''செல்கின்ற போழ்துஅந்தத்
திருஎல்லை பணிந்துஎழுந்து
பல்கும்வெந் தீவளர்த்த
பயில்வேள்வி எழும்புகையும்
மல்குபெரும் கிடைஓதும்
மடங்கள்நெருங் கினவும்கண்டு
அல்கும்தம் குலநினைந்தே
அஞ்சிஅணைந்திலர் நின்றார்''

இப்பாடலின் இறுதி அடி நந்தனாரின் மனம் வேறு வழியில் திசை திரும்பிவிட்டதை நமக்கு அறிவுறுத்துகிறது.

எத்தனை நாள்கள் சிதம்பரத்தைப் பற்றி நினைந்து, எவ்வாறாயினும் அங்கே சென்று நடராஜப் பெருமானை வணங்கவேண்டுமென்று அல்லும் பகலும் அதே நினைவாகக் காலம் கழித்தார்? 'நாளை போவேன், நாளை எப்படி யும் போவேன், நாளை இல்லாவிடினும் அதற்கு அடுத்த நாள், அதற்கு அடுத்த நாள் உறுதியாகப் போவேன்' என்று திருநாளைப் போவார் விழிப் பிலும் உறக்கத்திலும் எல்லாம் ஒரே நினைவாக இருந்தார். ஆனால், இந்த நினைவு தோன்றும் பொழுதெல்லாம் இதற்கு எதிராகக் குலத்தை நினைந்து, 'அங்கே செல்வது உறுகுலத்தோடு இசைவில்லை' என்ற எண்ணம் தோன்றியது. இவ்விரண்டு மாறுபட்ட எண்ணங்களின் இடையே நிகழ்ந்த போராட்டத்தின் முடிவில்

போக வேண்டுமென்ற எண்ணம் ஒரு வகையாக வெற்றி பெற்றுவிட்டது. இந்த எண்ணம் வலுப்பெற்றுத் தில்லைக்குப் புறப்பட்ட உடனேயே நந்தனாரின் மனத்திலிருந்து சாதி பற்றிய எண்ணம் மறைந்திருக்க வேண்டும். சாதி பற்றிய எண்ணத்தை வென்றுதானே தில்லைக்குப் புறப்பட்டார்! எந்த நேரத்தில் புறப்பட முடிவு செய்தாரோ அந்த நேரத்திலேயே சாதியின் இழிவுபற்றிய துயரம் மறைந்திருக்க வேண்டும். அப்படித்தான் நாமும் எதிர்பார்ப்போம். ஆனால், நடந்தது என்னவோ வேறாக இருந்துவிட்டது.

தில்லையின் எல்லையை அடைந்தவுடன், நீண்டகாலமாக அவருடைய மனத்தை நைவித்து வேறு எண்ணமே புகவிடாமல் தனியாக நின்ற ஒரு பேராசை, தில்லை செல்ல வேண்டும் என்ற பேராசை, இப்பொழுதுமுற்றுப் பெற்றுவிட்டது. எனவே அவருடைய மனத்தில் தேவையில்லாத மற்றோர் எண்ணம் குடிபுகத் தொடங்கிவிட்டது. ஆதனூரில் இருக்கின்ற வரையில் அடிமனத்தில் ஆழத்தில் தங்கியிருந்து, ஒரோவழி வெளிப்பட்டு, அவருக்குத் துயரத்தைத் தந்த சாதிபற்றிய எண்ணம் இப்பொழுது தலை தூக்கிவிட்டது. முன்னமே அவருக்கிருந்த கவலைதானே இது. அப்படியிருக்க இப்பொழுது புதிதாக என்ன நேர்ந்துவிட்டது என்று நாம் அய்யுறலாம். உண்மை என்னவெனில் முன்னரே இந்த எண்ணம் இருப்பினும் இதனை எதிர்த்துப் போராடுகின்ற ஓர் எண்ணம் — அதாவது தில்லை செல்ல வேண்டுமென்ற எண்ணம் —இருந்து வந்தது. இவை இரண்டிடையேயும் போராட்டம் இருந்தமையின் சாதி பற்றிய எண்ணம் வலுப்பெறவில்லை. அது வலுப்பெறவில்லை என்பதற்கு அவர் தில்லைக்குப் புறப்பட்டு வந்ததே சான்றாகும். சாதி பற்றிய எண்ணம் வலுவாக இருந்திருப்பின் தில்லைக்கு வந்தே இருக்க மாட்டார் அல்லவா? ஆதனூரில் இருக்கின்ற வரையில் வலுவிழந்திருந்த இவ்வெண்ணம், தில்லை வந்தவுடன், போராடுவதற்குரிய மற்றோர் எண்ணம் இன்மையினால் தானே வலுப்பெற்று நந்தனாரின் மனம் முழுவதையும் ஆட்கொண்டு தலை விரித்து ஆடத் தொடங்கிவிட்டது. அதனைத் தான் சேக்கிழார் பெருமான்,

'அல்கும் தம்குலம் நினைந்தே,
அஞ்சி அணைந்திலர்'

என்று பேசுகிறார். இந்த மனோநிலையையும் ஒருவாறு கடந்து ஊருக்குள் நுழைந்த நந்தனார் மறுபடியும் கோயில்புறம் செல்ல விரும்பாமல் தில்லையைச் சுற்றி வருகிறார்.

''இப்பரிசா யிருக்கவெனக்
கெய்தல்அரி தென்றஞ்சி
அப்பதியின் மதிற்புறத்தில்
ஆராத பெருங்காதல்
ஒப்பரிதாய் வளர்ந்தோங்க
உள்ளுருகிக் கைதொழுது
செப்பரிய திருவெல்லை
வலங்கொண்டு செல்கின்றார்''.

எல்லையிலேயே தோன்றிய சாதி பற்றிய இவ்வச்சம், ஊருக்குள் போனவுடன் பன்மடங்காகப் பெருகிவிட்டதை அறிகின்றோம்.

'இப்பரிசாயிருக்க எனக்கு எய்தலரிது' என்று அஞ்சினார் என்று அறிகிறோம். இந்த எண்ணம் அவரை முற்றிலும் ஆட்கொண்டுவிட்ட சூழ்நிலையில் பல நாள்கள் அங்குத் தங்கிப் பொழுதைக் கழிக்கிறார். ஒவ்வொரு நாளும் உறங்கப் போகும்பொழுது, எல்லையற்ற சிவ பக்தியுடையவராகிய அவர் இறைவனுடைய திருவடிகளையே நினைந்து உறங்கப் போயிருப்பார் என்று நாம் கருதுவோம். ஆனால், உண்மையில் நிகழ்ந்தது அதுவன்று எனச் சேக்கிழார் கூறுகிறார்.

''இன்னல் தரும் இழிபிறவு
இது தடைஎன்றே துயில்வார்'

என்று கவிஞர் பாடுகிறார். 'என்றே துயில்வார்' என்ற சொற்கள் இங்கு ஆராயத்தக்கன. இந்த ஓர் எண்ணத்தைத் தவிர, அவருடைய மனத்தில் இறைவனைப் பற்றிய எண்ணம் கூட இல்லை என்பதை நமக்கு அறிவுறுத்துவதற்குப் போலும் 'என்றே' என்ற தேற்றேகாரம் கொடுத்துப் பேசுகிறார். எனவே ஆதனூரில் இருந்த இந்தத் தாழ்வு மனப்பான்மை, தில்லைக்கு வந்த பின் விஸ்வரூபம் எடுத்து நந்தனாரை முழுவதுமாக ஆட்கொண்டு விட்டது. இறைவனைப் பற்றிய நினைவைக் கூட அமுக்கி, சாதி பற்றிய கவலை அடியாரை முழுக்க ஆட்படுத்திவிட்டது.

இத்தகைய ஒரு நிலையில் அந்த நடராஜப் பெருமானே வந்து 'உன் சாதிபற்றிய கவலை வேண்டா, நீ கோயிலுக்கு வா' என்று அருளியிருப்பினும் நெஞ்சுரம் உடைய அடியாராகிய நந்தனார் அதைப் பொருட்படுத்தி இருக்கமாட்டார். இம் மன நிலைக்குக் காரணமான பிறவி போனாலொழிய நந்தனார் அமைதியாக ஆண்டவனை வழிபட்டிருக்க முடியாது.

—தொடரும்



# சீவக சிந்தாமணி

கவியோகி சுத்தானந்த பாரதியார்

தமிழ்மொழியின்கண் உள்ள அய்ம்பெருங் காப்பியங்களுள், சீவகசிந்தாமணி ஒன்று. சீவக சிந்தாமணி, க்ஷத்ர சூடாமணி என்னும் வட நூலைத் தழுவிய தமிழ் நூல். அது 3,145 விருத்தங்களை உடையது. 13 இலம்பகங்களாகப் பிரிந்தது. நாமகள் இலம்பகம், கோவிந்தையார் இலம்பகம், காந்தருவதத்தையார் இலம்பகம், குணமாலையார் இலம்பகம், பதுமையார் இலம்பகம், கேமசரியார் இலம்பகம், விமலையார் இலம்பகம், பூமகள் இலம்பகம், இலக்கணையார் இலம்பகம், முத்தி இலம்பகம். இவற்றுள் முத்தியிலம்பகம் நல்ல நீதிகளையும் துறவு நெறியையும் சொல்லுகிறது. மற்றவை ஆழ்ந்த காதற் சுவையுள்ளவை. அழகான கவிச் சுவை நிரம்பியவை. சிறந்த கவிதையுள் சிந்தாமணி யொன்று. கதைப் போக்கிலும் அது மிகவும் இனியது. புலவர்கள் சிந்தாமணிக் காவியத்திற் சொக்கிப் போனார்கள். அனபாய சோழன் சிறந்த தமிழ் அறிஞன்; கலாரசிகன், சிறந்த தமிழ்க் காவியங்களை அவன் அடிக்கடிக் கேட்டு இன்புற்றான். அக்காவியங்களில் சிந்தாமணியே சிறந்தது; அரசன் அந்த அரிய காவிய விருந்தை அருந்தாத நாளில்லை.

## 4. விசயை :

சிந்தாமணிக் கதையைக் கேளுங்கள்: இராசமா புரத்தில் சச்சந்தன் என்னும் அரசன் ஆண்டான்; அவன் மாமன் விதயதேசத்தரசன் சீதத்தன் ; அவன் மகள் விசயை. சச்சந்தன் அவளை மணந்து, அவள் தந்த சிற்றின்பத் தேனில் ஈபோல் விழுந்து கிடந்தான் ; அரசாட்சிப் பொறுப்பையும் மந்திரி கட்டியங்காரனிடம் கொடுத்துவிட்டான்; கட்டியங்காரன் மோசக்காரன் ; மெல்ல மெல்லப் படைகளைத் தன் வசப்படுத்திப் புரட்சி யெழுப்பி, அரசனின் அந்தப் புரத்தை வளைத்துக் கொண்டான்; அப்போது விசயைக்குப் பத்து மாதம். அவளை ஒரு மயில் விமானத்தில் ஏற்றி, வேறிடம் பறந்து செல்லவிடுத்து, சச்சந்தன் போர் புரிந்து இறந்தான். கட்டியங்காரன் நாட்டைக் கைப்பற்றி ஆண்டான்.

மயிற் பொறி விமானத்திற் பறக்கும் விசயை இச்செய்தி கேட்டுச் சோர்ந்தாள்; விசையை முறுக்க மறந்தாள்; பொறி ஒரு மயானத்தில் வீழ்ந்தது; அங்கே விசயை ஒரு மகனைப் பெற்றாள். புறத்திலும் இருள்; அகத்திலும் இருள்; வழி தெரியவில்லை; செய்தி யெட்டினால் கட்டியங்காரனும் குழந்தையைக் கொன்று விடுவான் ; அதைப் பாது காக்கத் தனக்கும் இடமில்லை, திறனில்லை. விசயை மனம் வருந்திப் புலம்பினாள். அப்போது ஒரு தேவதை தோழி சண்பகமாலை வடிவு கொண்டு வந்து, சச்சந்தன் பெயர் பொறித்த ஒரு மோதிரத்தைக் குழந்தை விரலிற் போட்டது; ''அம்மா! கவலைப்படாதே; இப்போது ஒருவன் வந்து இக்குழந்தையை எடுத்துச் சென்று வளர்ப்பான் ; நாம் மறைவாயிருப்போம்'' என்றது. விசயை அவ்வாறே மறைந்திருந்தாள்.

## 5. சிவகன் :

இராசமாபுரத்தில் கந்துக்கடன் என்னும் தன வணிகன் இருந்தான்; அவன் மனைவி சுநந்தை. இவர்களுக்கு ஒரு குழந்தை பிறந்து அதே நாளில் இறந்தது. கந்துக்கடன் செட்டி, இறந்த குழந்தையைப் புதைக்க மயானத்திற்கு வந்தான். அங்கே புதிய குழந்தை யொன்றைக் கண்டான். அதுவே விசயை மகவு; அதை வீட்டிற்கு எடுத்துச் சென்று மனைவியிடம் 'நமது குழந்தை மீண்டும் உயிர்த்தது' என்று கொடுத்தான். வணிகச் செல்வர் அக் குழந்தைக்குச் சீவகன் என்று பெயரிட்டுப் போற்றி வளர்த்தனர். குழந்தை கையிலிருந்த மோதிரத்தைப் பார்த்து, அஃது அரசர் குழந்தை என்று அறிந்தான் கந்துக்கடன். இந்தக் குழந்தை வந்த பிறகு அவனுக்கு ஒரு குழந்தை பிறந்தது. பெயர் நந்தட்டன். சீவகன் நன்று வளர்ந்தான்; கற்பன கற்றான். கேட்பன கேட்டான். அச்சணந்தி என்ற ஒரு தவத்தினன் யானைத் தீ என்னும் நோயால் வருந்தினான். அவன் சீவகனைக் கண்டதும் அந்நோய் தீர்ந்தது. அந்த நன்றிக்காக அச்சணந்தி சீவகனுக்கு ஆயுதப் பயிற்சியும் போர்ப் பயிற்சியும் தந்தான்; ஒருநாள் ''அன்ப, நீயே இராசமாபுரத்திற்கு அரசன்; உனது தகப்பன் சச்சந்தனைக் கொன்றுதான், கட்டியங்காரன் நாடாளுகிறான்'' என்று உண்மையைச் சொன்னான். சீவகன் கட்டியங்காரனைக் கொன்று தனது அரியணையை மீட்க எழுந்தான். ''சீவக, ஓராண்டு பொறு; அதுகாறும் மறைந்திரு'' என்று சொல்லி அச்சணந்தி மகாவீரர் சமவசரணத்தைச் சார்ந்து, தவந் தொடர்ந்தான். மகன் நன்றாயிருப்பதை அறிந்து மகிழ்ந்து, விசயையும் தண்டகாரண்யத்தில் தவம் புரிந்தாள்.

## 6. திருமணங்கள் :

இராசமாபுரியில் புரட்சிக் கனல் பரவிக் கொண்டேயிருந்தது. ஒரு நாள் அரசனின் பசுக் களைச் சில வேடர் கவர்ந்து சென்றனர்; அரசன் படையனுப்பினான், மீட்க முடிய வில்லை ; பசுக்களைப் பேணிய இடையர் தலைவன் நந்தகோபன், வேடரிடமிருந்து ஆனிரை மீட்டு வரும் வீரனுக்குத் தன் மகள் கோவிந்தையைத் தருவதாகப் பறை சாற்றி னான். சீவகன் ஒருவனே பசுக்களை மீட்டான்; நந்தகோபன் தன் மகளைத் தந்தான்; சீவகன் தன் தோழன் பதுமுகனுக்கு அவளை மணம் புரிவித்தான்.

வெள்ளி மலையிலிருந்த வித்யாதரன் மகள் கந்தருவதத்தையைச் சீவகன் யாழிசையில் வென்று மணம் புரிந்தான். அவனுக்குப் போட் டியாக வந்த மன்னரைத் தோற்கடித்தான். இராசமாபுரத்து அரண்மனையில் ஒரு மத யானை இருந்தது; அது யாருக்கும் அடங்க வில்லை ; அஃது ஒரு நாள் குணமாலை என்னும் பெண்ணைக் கொல்ல வந்தது ; சீவகன் யானை யைத் துரத்திக் குணமாலையைக் காத்தான். முன்பே காதலித்த குணமாலை, சீவகனை மணம் புரிந்தாள். சீவகனுக்குத் தோற்ற யானை உண்ணாமல் சினமுற்றிறந்தது. நாட் டையாளும் கட்டியங்காரன் நடந்ததை அறிந் தான். ''கொண்டா அந்தச் செட்டி மகன் சீவகனை'' என்று, மதனனை ஏவினான் ; சீவகன் தனது வீரத்தைக் காட்டக் காலம் வர வில்லை ; ஆதலால் அரசன் ஆணைக்கு உடன் பட்டான் ; கட்டியங்காரன் அவனைச் சிறை யிட்டுக் கொல்லச் சொன்னான் ; மதனன் சீவகனைச் சிறையிலடைத்தான். முன்னொரு நாள் குளத்தில் விழுந்த ஒரு நாயைச் சீவகன் காப்பாற்றினான்; அந்த நாய் தேவனாக மேலே சென்று, பிறகு சுதஞ்சணன் என்னும் பெய ருடன் சந்திரோதய மலையில் வந்திருந்தது; சுதஞ்சணன் சீவகனுக்கு வேண்டிய துணை புரிய வாக்களித்தான் ; சீவகன் அவனை நினைத் தான்; மழையும் காற்றும் வீறிட்டிடித்த ஓரிரவில் சுதஞ்சணன் வந்து சீவகனைச் சிறையினின்றும் தனது நகருக்குத் தூக்கிச் சென்று பாதுகாத் தான்.

சீவகனைக் காணாது மதனன் திடுக்கிட் டான். மற்றொருவனைக் கொன்று, சீவகனைக் கொன்று விட்டதாகக் கட்டியங்காரன் கண் ணைத்துடைத்து இனாம் வாங்கிக் கொண்டான். சந்திரோதய நகரிலிருந்து சீவகன் பல ஊர் களைப் பார்க்கப் புறப்பட்டு, பல்லவ தேசத்தி லுள்ள சந்திராப நகருக்கு வந்தான். அந்நக ராதிபன் தனபதி என்பவன். அவன் மகள் பதுமை சோலையில் விளையாடும்போது பாம்பு கடித்து விட்டது; சீவகன் தனது மந்திர சக்தி யால் விடந் தீர்த்து, அவளைக் காப்பாற்றி னான். பதுமை அவனை மணந்தாள் ; இரண்டு மாதம் அவளுடன் இன்புற்றுச் சீவகன் ஓரிரவில் மாறு வேடம் பூண்டு தக்க நாட்டிலுள்ள கேம மாபுரத்தை யடைந்தான். அந்நகர் வணிகன் சுபத்திரன் மகள் கேமசரி. சீவகனைக் காத லித்து மணம் புரிந்தாள்; அவளுடன் இரண்டு மாதம் இருந்து, சீவகன் ஏமமாபுரம் சென்றான். அவ்வூர் அரசன் தடமித்தன் ; இளவரசன் விசயன்; அவன் சோலையில் மாங்கனியை எறிந் தான்; விழவில்லை; சீவகன் ஒரே அம்பில் மாங் கனியைத் தன் கையில் வந்து விழச் செய்தான்; விசயன் வியந்து சீவகனைத் தந்தையிடம் அழைத்துச் சென்றான்; சீவகனுடைய வில் வித்தையை மெச்சி, மன்னன் தனது மக்களுக்கு அதைப் பயிற்றும்படி வேண்டினான். சீவகன் தந்த பயிற்சியினால் இளவரசர் சிறந்த வில் வீரரானார்கள். மன்னவன் மகிழ்ந்து, தனது செல்வி கனகமாலையைச் சீவகனுக்கு மணம் புரிவித்தான். சீவகன் இங்கிருப்பதை அறிந்து அவன் நண்பரான பதுமுகன் முதலியோர் வந்தனர். அவர்கள் மூலம் அறிந்து, ஆவலாக விரைந்து, சீவகன் தண்டகாரண்யத்தில் அன்னை விசயமாதேவியைக் கண்டு மகிழ்ந் தான்; அன்னை மகனை அன்புடன் வரவேற்றுப் பெரு மகிழ் வெய்தினாள். பிறகு சீவகன் தனது மாமன் கோவிந்தன் துணையால் படை திரட்டி, அரசை மீட்க எழுந்தான். சீவகன் மாறுவேடம் பூண்டு, இராசமாபுரம் வீதியில் சென்றான். அவனருகே ஒரு பந்து வந்து விழுந்தது; அதை யெடுக்க வந்தாள் விமலை; கண்டாள் சீவகனை, காதல் பற்றியது. அவள் தந்தை சாகரதத்தன் என்னும் பலசரக்கு விற்ப வன். சீவகன் வந்த வேளை அவன் சரக்குகள் உடனே விற்றன ; வணிகன் மகிழ்ந்தான் ; தன் மகள் விமலையை சீவகனுக்கே தந்தான். அந் நாளில் குபேர தத்தன் என்றொரு செல்வன் இருந்தான் ; அவன் மகள் சுரமஞ்சரி ; அவள் ஆடவர் வாடையேயில்லாது வாழ்ந்து வந்தாள். அவளை மயக்கி மணம் புரிந்தால் ''நீயே காம திலகன்'' என்று புத்திசேனன் சொன்னான்; சீவகன் கிழவன் போல உருமாறிச் சென்று, பசிக்கு அன்னம் வேண்டுமென்று அந்தப்புரத் தில் புகுந்தான் ; கிழவனைச் சுரமஞ்சரி உப சரித்தாள் ; கிழவன் இனிமையாகப் பாடினான். அது சீவகன் பாட்டைப் போலிருந்தது. கேட் டாள் சுரமஞ்சரி ; சீவகனிடம் காதல் கொண்டு காம தேவனைவேண்டினாள். காமன் சிலைக்குப் பின்னால் இருந்த புத்திசேனன்''நீ சீவகனைப் பெற்றாய், போ'' என்றான். சுரமஞ்சரி வந்து பார்த்தபோது கிழவனே சீவகனாக நின்றான்; இருவருக்கும் மணவினை நடந்தது.

இனிக் கட்டியங்காரனை வென்று அவனது அரசைப் பெற முனைந்தான் சீவகன். மாமன் கோவிந்தராசனுடன் சூழ்ந்தான்; கோவிந்தராச னுக்கு மணமாகும் நிலையில் ஒரு பெண் இருந் தாள். அவன் ஓர் இயந்திரப் பன்றியமைத்து, அதை எய்து வீழ்த்தும் வீரனுக்கே தனது மக ளைத் தருவதாகப் பந்தயம் வைத்தான்; அதற்குக் கட்டியங்காரனும் வந்தான் : எல்லா ருடனும் அவனும் தோற்றான்.

## 7. சீவக மன்னன் :

கோவிந்தன், சீவகனைச் சிறப்புகளுடன் அழைத்து வந்தான் ; சீவகன் விசைப் பன்றி யை வீழ்த்தினான் ; சபையில் சீவகன் இன்னார் என்பதைக் கோவிந்தன் அறிவித்துப் புகழ்ந்

தான்; கட்டியங்காரனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. சீவகன் இறந்து போனதாக நம்பி அவன் ஏமாந்தான் ; அவன் சீறிச் சினந்து, செருக்காடி, கோவிந்தனையும் சீவகனையும் கொல்லத் துணிந்தான். கடும் போர் நடந்தது; சீவகன் கட்டியங்காரனைக் குலத்துடன் வெட்டி யெறிந்து முடிபுனைந்து, இராசமாபுரத்தில் அறச் செங்கோல் நடத்தினான். தான் மணந்த தேவிமார்களை யெல்லாம் வரவழைத்து அவர் களை ஆதரித்தான். கோவிந்தன் மகள் இலக் கணையைச் சிறப்பாக மணந்தான். கந்துக் கடனை நன்றியுடன் பாராட்டி, அரசுரிமை ஈந்தான் ; அவன் மகன் நந்தட்டனை இளவர சாக்கினான். தன்னைச் சார்ந்த நண்பர், துணைவர், தனக்குச் சமயத்தில் உதவினவர் அனைவருக்கும் ஏராளமான நிலபுலன்களையும் பட்டம் பதவிகளையும் அளித்தான். அருகக் கடவுளுக்குச் சிறப்புச் செய்தான். எல்லா வுயிர்களும் மகிழும்படி ஆண்டான்.

**நன்றி :**

தாய் விசையை மனமகிழ்ந்தாள் ; ஏராள மான தான தருமங்கள் செய்தாள். சீவகன் பிறந்த மயானத்தை அன்னசாலையாக்கினாள். அருகக் கடவுளுக்குக் கோயிலமைத்தாள்; சீவகனுக்கு இத்துடன் எட்டு மனைவியர். அனைவரையும் விசையை அன்புடன் வாழ்த்தி, ''உலகாளும் மைந்தரைப் பெறுக'' என்று ஆசீர் வதித்தாள். சீவகனுக்குத் தருமோபதேசம் செய்தாள். பிறகு உலகைத் துறந்து, ஒரு தவப் பள்ளியில் தீட்சை பெற்றுத் தவம் புரிந்து கொண்டிருந்தாள்.

சீவகன் எட்டு மனைவியருடனும் சுகபோ கங்களை வேண்டும் மட்டும் நுகர்ந்தான்; ஒவ்வொரு மனைவிக்கும் ஒரு மகன் பிறந்தான். காந்தர்வதத்தைக்கு சச்சந்தன், குணமாலைக்கு சுதஞ்சணன், பதுமைக்கு தரணி, கேமசரிக்கு கந்துகடன், கனகமாலைக்கு விஜயன், விம லைக்கு தத்தன், சுரமஞ்சரிக்கு பரதன், இலக் கணைக்கு கோவிந்தன். தனக்குத் துணை செய்தவர் பெயரையே சீவகன் தன் மைந்த ருக்கு வைத்தான். இவ்வாறு சீவகன் நாற்பத் தைந்து வயது மட்டும் உலகின்பத்திலேயே மயங்கியிருந்தான்.

**சீவகன் துறவு :**

ஒரு நாள் அவன் தனது பூஞ்சோலைக்கு மனைவியருடன் சென்று உல்லாசமாயிருந்தான். அப்போது ஒரு பெண் குரங்கு ஆணுடன் பிணங் கியது ; அதை மகிழ்விக்க, ஆண் குரங்கு ஒரு பலாப்பழத்தைப் பிட்டுச் சுளையைத் தரும் போது, காவற்காரன் குரங்கை விரட்டிப் பழத்தைத் தானே கைப்பற்றி உண்டான். சீவகன் கண்டான் ; உலகில் ஒருவன் செல்வத் தை இன்னொருவன் பறித்து உண்பதும், இன் றிருந்த அரசாட்சி நாளை வேறு கை மாறுவ தும் உணர்ந்தான். அந்தக் குரங்கு போலக் கட்டியங்காரன் அரசிழந்ததை எண்ணினான். உலக வாழ்வு நிலையற்றது என்றே அறிந்தான்; துறவை விரும்பினான் ; அருகாலயம் சென் றான். அங்கே இரண்டு சாரணர் இருந்தனர்; அவர்களை வணங்கிச் சீவகன் உபதேசம் கேட் டான். இருவரும் பிறவித் துயர், துறவின் பெருமை, தவத்தின் சிறப்பு, அதற்காகிய விரதங்கள் முதலியவற்றை உபதேசித்தனர். முற்பவத்தில் சீவகன் அசோதரனாயிருந்தான். ஒரு அன்னக் குஞ்சைத் தன் மனைவியருக்குப் பிடித்துக் கொடுத்துக் கூண்டிலடைத்த பாவத் தால், இப்பிறப்பில் சிறைப்பட்டிருந்தான் என் பதையும் சொன்னார்கள்.

''அய்வகைப் பொறியும் வாட்டி
ஆமையின் அடங்கி, அய்ந்தின்
மெய்வகை தெரியுஞ் சிந்தை
விளக்குநின் றெரிய விட்டுப்
பொய்கொலை களவு காமம்
அவா இருள் புகாது போற்றிச்
செய்தவம் நுனித்த சீலக்
கனைகதிர்த் திங்கள் ஒப்பார்.''

என்பது உபதேச சாரம். பக்குவம் வந்தது; சீவகன் தனது மூத்த மகனான சச்சந்தனுக்குப் பட்டங்கட்டி, அவரவர்க்கு உரிய சிறப்புச் செய்து, அரசைத் துறந்து, வர்த்தமான மகா வீரர் சமவ சரணத்தை அடைந்தான். அங்கே சுதர்மகணதரர் கட்டளைப்படித் துறவு பூண்டு தவஞ்செய்து வினை நீங்கி வீடு பெற்றான். அந்த நாளை எல்லாரும் சிறப்பாகக் கொண் டாடினர்.

— **(தொடரும்)**

செய்திச் சுருக்கம்

## தென்னிந்திய அர்ச்சகர் சங்கம்

தென்னிந்திய அர்ச்சகர் சங்கத்தின் 29-வது ஆண்டு மாநாடு சென்னைப் புரசைவாக்கம் இராஜா சர். அண்ணாமலைச் செட்டியார் வீதியிலுள்ள தருமப்பிரகாஷ் திருமண மண்டபத்தில் 20-12-78 புதன் கிழமை காலை 9.5 மணிமுதல் இரவு 9 மணிவரை நடைபெற்றது. தமிழ்நாடு ஆளுநர் மேதகு பிரபுதாஸ் பட்வாரி அவர்களும், அறநிலையத்துறை அமைச்சரின் சட்டமன்றச் செயலர் மாண்புமிகு ஐசரி வேலன் அவர்களும், அறநிலைய ஆணையர் திரு யு. சுப்ரமணியன், I.A.S., துணை ஆணையர் திரு. ஆர். அர்ச் சுனன், B.A., திரு. இ. பொன்னப்பபிள்ளை, B.Com. ''திருக்கோயில்'' ஆசிரியர் திரு. ந. ரா. முருகவேள், M.A.,M.O.L., தினமணி உதவி ஆசிரியர், திரு கருப்பையா, B.A., திரு. வி. எஸ். ஸ்ரீகுமார், B.A., திரு வாவடுதுறை திரு. எஸ். சுவாமிநாதகுருக்கள், திருவாடானை திரு. அய்யாமணிசிவம், திரு. எஸ். எம். கே. பரசுராமகுருக்கள், திரு. வி. சேஷ பட்டாச்சாரியார், திரு. ஆர். வரதராஜபட்டாச்சாரியார், திரு. டி. எஸ். சாம்ப மூர்த்தி சிவாச்சாரியார், திரு. ஆர். இராகவ பட்டாச்சாரியார் திரு. வெங்கட கிருஷ்ண பட்டாச்சாரியார் திரு. என். டி. தட்சிணாமூர்த்தி, திரு.எஸ். ஏகாம்பரம், புலவர் திருமதி. பொ. தெய்வ நாயகி ஜோதி, M.A., ஆகியோர் பலர் கலந்து கொண்டு சிறப்பித்தனர். மாநாட்டிற்குச் சிவாச்சாரியர் களும் பட்டாச்சாரியர்களும் பெருந்திரளாக வந்திருந்து சிறப்பித்தனர்.

# அப்பர் தேவாரத்தில் தூதுகள்

திரு. ம. சா. அறிவுடைநம்பி, M.A., மதுரை

### முன்னுரை :

''தூது'' என்பது, தமிழில் வழங்கும் தொண்ணூற்றுறு வகைப் பிரபந்தங்களில் ஒன்று. இத்தூது பெரும்பாலும் அகத்துறைப் பாக்களிலேயே இடம் பெறும். தலைவன் தலைவி இருவருக்குமிடையே அன்னம், மயில், கிளி, மேகம், குயில், நெஞ்சு, தென்றல், வண்டு முதலியவைகளைத் தூது செல்லுமாறு கூறுதல் இதன் இலக்கணம்.

''எகினம் மயில் கிள்ளை எழிலியொடு பூவை
சகி குயில் நெஞ்சம் தென்றல் வண்டு—
தொகைபத்தை
வேறுவேருப் பிரித்து வித்தரித்து மாலை,
கொண்டு அன்பு
கூறிவா என்றல் தூது''[1]

என்பது தூதின் இலக்கணமாகப் பிரபந்தத் திரட்டு கூறும்.

''கேட்குந போலவும் கிளக்குந போலவும்
இயங்குந போலவும் இயற்றுந போலவும்
அஃறிணை மருங்கினும் அறையப் படுமே''

என்ற தொல்காப்பியத்தின்படி, அஃறிணை உயிர்களையும் பொருள்களையும் தூது விடுதல் பொருந்தும். ஆயின் அப்பர் அருளிய தேவாரத்தில் அமைந்துள்ள தூதினைக் காணுவதே இக்கட்டுரையின் நோக்கம்.

### அப்பரும் தூதும் :

அப்பர் அருளிய பதிகங்களில் ஒரு பதிகத்திலும், மற்றொரு பதிகத்தில் ஒரு பாவிலும் தூது இடம் பெற்றுள்ளது. இவற்றுள் முன்னையது திருப்பழனத் திருப்பதிகம். பின்னையது திருமருகற் பதிகம். இது தவிரத் தூதுவிடக் கருதிய தலைவி தோழிக்குக் கூறியதாக ஒரு பதிகம் உள்ளது. திருப்புறம்பயம் என்னும் திருத்தாண்டகமே அத்திருப்பதிகம். திருப்பழனப் பதிகத்தின் பண் பழந்தக்கராகம். திருமருகற் பதிகம் திருக்குறுந்தொகையில் அமைந்துள்ளது. திருப்பழனத்துச் சோலையில் குயில், நெய்தல், குருகு, தென்றல், நாரை, பூவை, மான் முதலியவற்றை அன்பிற் பழுத்த தலைவி பழனத்தில் இருக்கும் தன் தலைவனிடம் (இறைவனிடம்) தூது விடுக்கின்றுள்.

### குயில்விடு தூது :

தூது செல்கின்றவர்க்கு இன்றியமையாத ஒன்று சொல் இனிமையாகும். அஃதாவது இனிமையாகப் பேசித் தாம் முடிக்கவந்த காரியத்தை முடிப்பதேயாகும். சொல்லிய வரிசையில் தவருது கூவுதல் குயிலுக்கு இயல்பு. எனவே குயில் மொழியில் உளங்கொண்ட தலைவி அக் குயிலைத் தன் தலைவனிடம் தூது விடுக்கின்றுள். ''குயிலே! நான் படும் துயரத்தை என் தலைவனிடம் சென்று கூறமாட்டாயா? வண்டுகள் மிழற்றும் பழனத்தில் இருக்கின்றுன் என் தலைவன். அவன் மார்பில் எப்பொழுதும் மாலை தவழ்ந்து கொண்டிருக்கும். தலையில் பிறையைச் சூடி இருப்பான். அவனிடம் சென்று என் நிலையைக் கூற மாட்டாயா?'' என்று ஏங்குகிறுள் தலைவி.

''சொன்மாலை பயில்கின்ற குயிலினங்காள்
சொல்லீரே
பன்மாலை வரிவண்டு பண்மிழற்றும் பழ
னத்தான்''

என்பதே அப்பாடல் வரிகள். ''சொல்லீரே'' என்பதில் ''சொல்லுங்கள்'' என்ற வேண்டுகோளும், ''சொல்லமாட்டீர்களா'' என்ற ஏக்க உணர்வும் இருப்பதை, அந்தச் சொல்லைப் பன்முறை சொல்லிப் பார்த்தால் அறியலாம்.

### நெய்தல்விடு தூது :

பழனத்துச் சோலையில் நெய்தல் கண்டகம் முண்டகம், கைதை (தாழை) முதலானவை பூத்துக் குலுங்குகின்றன. அங்குள்ள பொய்கையில் மலர்ந்துள்ள பூக்களில் தேன் உண்ணுவதற்காக வண்டுகள் பல வந்துள்ளன. இதே ஊரில் தான் என் தலைவனும் இருக்கின்றுன். அவன் ஓர் கலைப்பித்தன். பண்டரங்கம் என்னும் கூத்துக்குத் தக்க கோலத்தை உடையவன். அவனைக் காணுமல் என் தளிர்வண்ணம் நிறம் மாறுகின்றதே! அவன் என் நிலையைக் கண்டால் என்னைக் காணஓடி வந்து விடுவானே! கண்டகங்காள்! முண்டகங்காள்! கைதைகாள்! நெய்தல்காள்! என் நிலையை அவனிடம் எடுத்துக் கூறமாட்டீர்களா?

''கண்டகங்காள் முண்டகங்காள்
கைதைகாள் நெய்தல்காள்
பண்டரங்க வேடத்தான்
பாட்டோவாப் பழனத்தான்
வண்டுலாந் தடமூழ்கி
மற்றவனென் தளிர்வண்ணம்
கொண்டநாள் தானறிவான்
குறிக்கொள்ளா தொழிவானே''

இவ்வாறு கேளாதவற்றைக் கேட்பனபோலக் கூறுவது பண்டைய மரபு பற்றியாம்.

### குருகும் வண்டும் :

மதம் பொழியும் முகம்; பனைபோலும் திரண்டு உருண்ட கைகள்; இதனையுடையயானையின் தோலை உரித்து ஆடையாகப் போர்த்தியுள்ளான் என் தலைவன். அவனைச் சுற்றிலும்

எப்பொழுதும் தொண்டர்கள் இருப்பார்கள். அவர்கள் அவனுடைய புகழ்மிக்க வீரச்செயல் களைப் போற்றிப் பாடிக்கொண்டிருப்பார்கள். அவன் இருக்கும் ஊர் எது தெரியுமா? திருப் பழனமாகும். தோட்டத்தில் வளர்ந்துள்ள காஞ்சி மரத்தில் இருக்கும் இளங்குருகே! தலைவன்தான் மறந்துவிட்டான். நீயும் மறந்து விட்டாயோ? தலைவன்பால் கொண்ட அளவற்ற அன்பால் (காதலால்) என் உள்ளமும் உடலும் சோர்ந்துவிட்டதே.

### தென்றல்விடு தூது :

மதியாதார் வேள்வியினை அழித்து மதியை யும் கங்கையையும் தன் தலையில் சூடி இருக் கின்றான் என் தலைவன். அவனுக்கு அதற்கெல் லாம் நேரம் இருக்கின்றதே தவிர என்னைக் காண மட்டும் நேரம் இல்லைபோலும். பூந் தென்றலே! அவனிடம் சென்று என் நிலையைக் கூறி வரச்சொல்லமாட்டாயா?

### நாரைவிடு தூது :

பொங்குகின்ற ஓசையை உடைய பெருமை யினைப் பெற்றது நீலநிறக்கடல். அக்கடலை நம்பி வாழும் உயிரினங்கள் பலப்பல. உயிரி னங்கள் மட்டுமா? மனித இனமும்தான் அதனை நம்பி வாழ்கின்றனவே! அக்கடலில் சென்று இரையைத் தேடும் செம்மையான கால்களை உடைய வெண்ணிற நாரையே! என்னால் இனி ஒன்றும் செய்யமுடியாது என்று நான் அறிய மாட்டாதவளானேன். அழகிய சோலைகள் சூழ்ந்த திருப்பழனத்திலிருந்தும் என் தலைவன் என்னுடைய அழகிய திரண்ட வளைகளைக் கவர்ந்து விட்டான். அவன் மார்பில் குடியிருக் கும் மணம் வீசும் கொன்றை மாலையையாவது, அவனிடமிருந்து வாங்கிவர மாட்டாயா?

''பொங்கோத மால்கடலிற்
புறம்புறம்போ யிரைதேடும்
செங்கால்வெண் மடநாராய்
செயற்படுதல் அறியேனன்
அங்கோல வளைகவர்ந்தா
னணிபொழில்சூழ் பழனத்தான்
தம்கோல நறுங்கொன்றைத்
தாரருளா தொழிவானே''

### பூவைவிடு தூது :

காவிரியாகிய பூம்பாவை வளங்கொழிக் கும் பதிகள் பலவற்றுள் ஒன்று திருப்பழனம். அப்பழனத்தில் முத்துக்களை வாரி இறைக் கின்றது பொன்னி. இத்தகைய வளமிகுந்த ஊரில் வாழும் பூவையே! என் நிலையைத் தலைவ னிடம் சென்று கூறமாட்டாயா? என் தலைவன் உள்குவார் உள்கிற்றெல்லாம் உடனிருந்து அறிந்து, அவர் குறைகளைத் தீர்த்து வைப்பவனு யிற்றே. அவர்களுக்கு ஏற்பட்ட துயரைக் களைந்து இன்பம் விளைப்பான் என்றுஉலகோரனை வரும் சொல்கின்றனர். ஆயின் எனக்கு ஏற் பட்ட துயரத்தைக் களைவதற்கு மாறாக என்னை வஞ்சித்து என் கை வளையல்களையல்லவோ அவன் கவர்ந்துவிட்டான். பஞ்சின் மெல்லடி யும் சிறகும் உடைய அன்னப்புள் பரந்து ஒலி செய்யும் பழனத்தில் வாளா இருக்கின்றானே என்று வருந்துகின்றாள்.

### கிளிவிடு தூது :

பசுமையான கிளியை வளர்க்கிறாள் தலைவி. அக்கிளிக்குப் பல சொற்களைக் கூறிப் பழக்கி விடுகின்றாள். அமுதினை அளித்து, அக் கிளி யைப் பேணிப் பாதுகாக்கிறாள். பல நாட் களாக அதற்குப் பயிற்சி கொடுக்கிறாள். பார்க் கின்றவர்கள் வியப்படைகின்றனர். எதற்காக இப்பெண் இவ்வாறு செய்கின்றாள் என்கின்ற னர். பாலும் சோறும் ஊட்டி வளர்த்த கிளி யிடம் தனக்காகத் தன் தலைவனிடம் தூது செல்லத் தொடங்குகிறாள். இப்போதல்லவா அவள் செயல் புரிகிறது.

''ஓது பைங்கிளிக் கொண்பா லமுதூட்டிப்
பாது காத்துப் பலபல கற்பித்து
மாது தான்மரு கற்பெரு மானுக்குத்
தூது சொல்ல விடந்தான் தொடங்குமே''

### கூடலிழைத்தல் :

பலவாறு வருந்திய தலைவி இறுதியில் 'கூடற்சுழி' போட்டுப் பார்க்கின்றாள். அதில் வழு நேரவே ''வாரான்'' என அறிந்து, ''வாரானே ஆயிடினும் கோடுஇயை சேவடி யாய்'' என்று கூடற்றெய்வத்தை வேண்டுகின் றான்.

''வஞ்சித்தென் வளைகவர்ந்தான்
வாரானே ஆயிடினும்
பஞ்சிக்காற் சிறகன்னம்
பரந்தார்க்கும் பழனத்தான்
அஞ்சிப்போய்க் கலிமெலிய
வழலோம்பு மப்பூதி
குஞ்சிப்பூ வாய்நின்ற
சேவடியாய் கோடியையே''

### திருத்தாண்டகம் :

திருப்புறம்பயம் என்னும் திருத்தாண்ட கத்தில் பத்துப் பாக்கள் நயமுற அமைந்துள் ளன. இப்பத்துப் பாக்களும், தலைவனுக்குத் தூதுவிடக் கருதிய தலைவி தோழிக்குக் கூறிய தாக அமைந்துள்ளது. அஃதாவது, இறைவன் மண்டை ஓட்டைக் கையில் எடுத்துக் கொண்டு பிச்சைக்காக வேண்டித் தெருத் தெருவாக வரு கின்றான். அவனது வருகையின் அழகைக் கண் டும், அவன் பேசிய பேச்சைக் கேட்டும், அதில் தன் நிலையை மறந்து நிறையழிந்து விடுகிறாள் ஒருத்தி. நாள்தோறும் அவன் வருகையால் ஆற்றியிருப்பாள். பின்னர் அவன் வாரா தொழியவே அதனை ஆற்றாத அவள் அவனுக் குத் தூதுவிடக் கருதுகின்றாள். அதனைத் தன் ஆருயிர்த் தோழியிடம் கூறுகின்றாள். நாள் தோறும் அவனைக் கண்டு உரையாடுகிறாள். அப் பொழுது அவன் தன் ஊரை வேறு வேறாகக் கூறுகிறான். அதனைக் கேட்ட அவள் தன் தலைவன் உலகம் முழுதுடையவனுதலை உணர் கிறாள். இறுதியில் அவன் தன் ஊர் புறம்பய மாகக் கூறிச் சென்றுவிடுகிறான். இதுவே இப் பதிகத்தில் இடம் பெறும் செய்தியாகும். **

# நரசிங்கப் பெருமாளின் நல்லருட்டிறன்

முன்னுரை:

திருமாலின் அவதாரங்கள் பத்தினுள், ஒவ்வொன்றிற்கும், ஒவ்வொரு சிறப்பும், தத்துவ விளக்கமும் உண்டு. பெருமாள், அடியார்க்கு அருளும் இயல்பும், அடியவரின் பகைவரை ஒறுக்கும் பண்பும் வாய்ந்தவர். அடியவர்கட்கு அருளும் இயல்பை ''ஆச்ரித அனுக்கிரக சீலம்'' என்றும், அடியவரின் பகைவரை ஒறுக்கும் பண்பை 'ஆச்ரித விரோதி நிக்கிரக சீலம்'' என்றும் பெரியவர்கள் குறிப்பிடுவர். இவ்விரு பண்புகளுக்கும் நிலைக்களமாக விளங்குபவர் நரசிங்கப் பெருமாள்.

அதனாலேயே அவர் மிக்க பெருமையும் சிறப்பும் உடையவராகப் போற்றப்படுகின்றார். இத்தகைய சிங்கப் பிரானின் பெருமை, நம் அறிவு கொண்டு ஆராய்ந்து அளத்தற்கு உரியதன்று. ஆயினும், அது நாம் இயன்ற அளவு ஆராய்ந்து உணர்ந்து அனுபவித்து மகிழ்தற்குரியது. இவ்வுண்மையினையே, ''சிங்கப் பிரான் பெருமை ஆராயும் சீர்மைத்தே'' என வினாக் குறிப்பும், வியப்புக் குறிப்பும் அமைய, நம்மாழ்வார் நயந்து இனிது அருளிச் செய்கின்றார்.

''எங்கும் உளன் கண்ணன்
என்ற மகனைக் காய்ந்து
இங்கு இல்லையால் என்று
இரணியன் தூண்புடைப்ப,
அங்கு அப்பொழுதே அவன்
வீயத் தோன்றிய என்
சிங்கப் பிரான் பெருமை
ஆராயும் சீர்மைத்தே''
—நம்மாழ்வார்.

பொய்கையார்:

இரணியன் தன்னை இகழ்ந்ததனாலேயே, பெருமாள் இரணியனைக் கொன்றார் என்று பலரும் நினைப்பர். தம்மை இகழ்ந்தமைக்காகப் பெருமாள், இரணியனைக் கொன்றார் அல்லர் ; தம் அடியவனாகிய பிரகலாதனை இரணியன் நலிந்தது தரிக்க மாட்டாமையினாலேயே, பெருமாள் இரணியனைக் கொன்றார்.

''வரத்தால் வலிநினைந்து மாதவநின் பாதம்
சிரத்தால் வணங்கானாம் என்றே?—உரத்தினால்
ஈரரியாய் நேர்வலியோன் ஆய இரணியனை
ஓர் அரியாய் நீ இடந்தது ஊன்''

என வரும் பொய்கையாழ்வார் பாடல், இங்கு நாம் சிந்தித்தற்குரியது.''மாதவனே! இரணியன் உன்னை இகழ்ந்து பழித்தான் என்பதற்கோ, அவனை நீ வதைத்தாய்? அதற்கான காரணம். அன்புப் பக்தர்களின் தலைவனான பிரகலாதனிடத்தில் அவன் பெரிதும் கொடுமை செய்து குற்றப்பட்டான் என்பதற்காக அன்றோ, அவனை வதைத்தாய்'' என்பது இப்பாடலின் பொருள்.

''நாட்டில் கண்டறியாத அத்விதீயமான நரசிம்மமாய் வடிவம் கொண்டு, அவனுடைய ஊன் மலிந்த பெரிய சரீரத்தை, ஆச்ரிதவத்சலனான நீ இடந்து போகட்டது, பிரம்மாதிகள் கொடுத்த வரத்தால் வந்த தன் மிடுக்கைக் கனக்க நினைத்து, சர்வாதிகனான உன்னுடைய திருவடிகளைத் தலையாலே வணங்கி, ஆச்ரயியாதே யிருந்தான் என்றோ? அன்றிறே ; சிறுக்கனைப் பலவாறு கறுவி நலிந்தான் என்னும் இது கொண்டிறே என்றபடி''.

எனவரும் பழைய சிறந்த உரைப் பகுதியும், இங்கு நாம் அறிந்து இன்புறற்பாலது. மேலும் ''ஈசுவரன் அவதரித்துப் பண்ணின ஆனைத் தொழில்கள் எல்லாம் பாகவத அபசாரம் பொறுக்க இயலாத தன்மை என்று ஜீயர் அருளிச் செய்வார்'' என்னும் சீர்வசன பூடணத் திருமொழியின் பொருட்செறிவும், இங்கு நாம் சிந்திக்கற்பாலது.

அருட்டிறன்:

பெருமாள், தம்முடைய அடியவர்களின் விருப்பங்களை நிறைவேற்றுவது மட்டுமின்றி, தம்மைப் பகைப்பவர்களின் விருப்பங்களையும் கூட ஒரு வகையில் நிறைவேற்றி அருள்கின்றார் என்பது, நாம் உணர்தற்குரியது. ''எங்குமுள்ளான் கண்ணன்'' என்றான் பிரகலாதன். ''இங்கில்லை'' என்று இரணியன் தூண் புடைத்தான். அங்கு அப்பொழுது, அவனுடைய மனைவாசல் தூணில் பெருமாள் வெளிப்பட்டார். அவன் தட்டிய தூணில் தோன்றினார். அவன் தட்டிய இடத்திலிருந்தே புறம் போந்தார்

பிரமன் படைப்பிற்குட்பட்ட எதனாலும் நான் இறக்கலாகாது என, இரணியன் விரும்பினான். அதனால், பிரமன் படைப்பில் இல்லாத மனித உடலும், சிங்க முகமும் கொண்டு ஆளரி (நரசிங்கம்) ஆகத் தோன்றினார். அஸ்திர சஸ்திரங்கள் எதனாலும் தனக்கு இறப்பு நேர்தல் ஆகாது என்று இரணியன் விரும்பினான். அதனால் அவை யிரண்டும் அல்லாத நகங்களைப் பெருமாள் பயன்படுத்தினார். இரவிலோ பகலிலோ, தான் இறத்தலாகாது என்றான். அதற்கு இசைந்து இரவும் பகலும் அல்லாமல், அவை இரண்டும் கூடிய சந்தியாகிய மாலை

வேளையில், பெருமாள் அவனை ஒறுத்தார். வீட்டிலோ வெளியிலோ தனக்கு இறுதி விளைதல் ஆகாது என்றான். அதனால் வீடும் வெளியுமில்லாத வாயிற்படியில் பெருமாள் அவனைத் தடிந்தார். மண்ணிலோ வானிலோ தனக்கு முடிவு நேர்தல் கூடாது என்றான். அதற்காக மண்ணும் விண்ணும் அல்லாத, தம் மடியின் மீது வைத்து அவனைத் தடிந்தார். தம்மைப் பகைப்பவனின் விருப்பங்களையும் கூட, ஒரு வகையில் நிறைவேற்றி வைக்கும் அருட் பண்பு உடையவர் நரசிங்கப் பெருமாள் என்பது, இதனால் விளங்குகிறது.

**எம்பெருமான்:**

சிறந்த அரசர் முதலிய தலைவர்களுக்கும், கடவுளுக்கும் இன்றியமையாத பண்புகள் இரண்டு உண்டு. ஒன்று கொடியோர்த் தெறுதல் (துஷ்ட நிக்கிரகம்), மற்றொன்று செவ்வியோர்க்கு அளித்தல் (சிஷ்ட பரிபாலனம்). இவ்விரண்டு குணங்களும் தலைமைப்பாடுடைய தக்கோர் அனைவருக்கும், இன்றியமையாத சிறந்த தன்மைகளாகும்.

''நட்டோரை உயர்பு கூறினன்
செற்றோரை வழிதபுத்தனன்''

என வரும் புறநானூற்று வரிகளும் இவ்வுண்மையை உணர்த்துதல் காணலாம். பெருமாள், இவ்விரு தன்மைகளையும் ''சிங்கப்பிரான்'' ஆகிய இவ்வவதாரத்தில் சிறப்புற வெளிப்படுத்தி அருளியுள்ளார். செவ்வியோர்க்கு அளித்தலாகிய அநுக்கிரகமும், கொடியோர்த் தெறுதலாகிய நிக்கிரகமும் இவ்வவதாரத்தில் ஒரே சமயத்தில் ஒருங்கே நிகழ்ந்துள்ளன.

''தோற்றக் கேடவை இல்லவன்
உடையான் அவன் ஒரு மூர்த்தியாய்
சீற்றத்தோடு அருள் பெற்றனன்
அடிக்கீழ்ப் புகநின்ற செங்கண்மால்''

எனவரும் திருவாய்மொழிப் பாசுர விரிவுரையில்,

''இரணியன் பக்கல் சீற்றமும் செல்லா நிற்கப் பிரகலாதாழ்வானுக்குக் கிட்டலாயிருந்தபடி எங்ஙனே?'' என்று சிலர் கேட்க, ''சிம்மம் ஆனை மேலே சீறினாலும் குட்டிக்கு முலையுண்ணலாம்படி இருக்கும்மிறே'' என்று எம்பெருமானார் அருளிச் செய்தார். ஆச்ரித வாத்சல்யத்தாலே அவர்களின் விரோதிகள் மேலே சீறின சீற்றமானால், பின்னை ஆச்ரிதர்களுக்கு அணைய வொண்ணாதபடி இருக்குமோ?'' என்று அவர் அருளிச் செய்தார்''.

என்று இங்ஙனம் வரும் விரிவுரைப் பகுதியால், சிங்கப் பிரான் நிக்கிரகம் அனுக்கிரகம் ஆகிய இரண்டையும் ஒரு சேர நிகழ்த்தியருளிய திறன் தெளியலாம்.

**நம்பிள்ளை உரைநயம்:**

ஆராயும் சீர்மை அமைந்த சிங்கப்பிரானின் பெருமையினை, நம்மாழ்வார் வேறொரு பாடலிலும் நன்கினிது விளக்கியருள்கின்றார்.

''உன்னைச் சிந்தையினால் இகழ்ந்த இரணியன்
அகல்மார்வம் கீண்ட என்
முன்னைக் கோளரியே! முடியாதது
என் உனக்கே!''

என்பது நம்மாழ்வார் அருளிய ஒரு திருப்பாசுரம். இதன்கண் ''உன்னை இகழ்ந்த இரணியன்'' என்பதே அமையும். எனினும் ''உன்னைச் சிந்தையினால் இகழ்ந்த இரணியன்'' என்று விதந்து கூறப்பெற்றுள்ளது. இவ்விதப்புச் சொல், ஓர் ஆழ்ந்த பொருட்குறிப்பு உடையதாகத் திகழ்கின்றது. நம்பிள்ளை என்னும் வைணவப் பெரும் சான்றோர், நயஞ்சான்ற அவ்வரும் பெறற் பொருட் குறிப்பினை விளக்கி அருளியுள்ளார்.

இறைவன், அன்பர்களுக்கு அருள் செய்தும், அன்பற்ற கொடியவர்களை ஒறுத்தும் வருகின்றான். இங்ஙனம் செய்யுங்கால் அன்பர்களிடத்தில் மனம் நிறைந்த பேரன்பின் திறத்தை எதிர்பார்த்தே அருள் செய்வதில்லை. ''பொய்யே புகழ்வார் புகழ்ந்தால் அதுவும் பொருளாகக் கொள்வானே'' என்றபடி, போலி அன்பிற்கும்கூடப் பெரிதும் மகிழ்ந்து இறைவன் இன்னருள் புரிகின்றான். இவ்வாறே அன்பில்லாத கொடியவர்களைக் கடிந்து ஒறுப்பதிலும், வெளியே மேலுக்குத் தோன்றுகின்ற பகைமையைக் கொண்டே இறைவன் ஒறுத்து விடுவதில்லை. உள்ளபடியே அவர்களின் உள்ளத்திலும், பகைமையுணர்ச்சி ஆழ்ந்து படிந்திருக்கிறதா என்று ஆராய்ந்து பார்த்து, அதன் பின்னர்தான் இறைவன் அவர்களை ஒறுக்க முற்படுகின்றான்.

ஒருவனுக்கு அருள் செய்வதற்கு ''என் பெயரைச் சொன்னான்''—''என் ஊரைச் சொன்னான்'' என்றாற் போன்ற அற்பமான காரணம் ஏதேனும் ஒன்று இருந்தாலும் போதும்; அல்லது காரணம் இல்லாமலே கூட இருக்கலாம். இறைவனின் அருள் ''நிர்ஹேதுக கிருபை'' (காரணமில்லாத இரக்கம்) எனப்படுமாதலின். ஆனால் ஒருவனைத் தண்டிப்பதற்கோ, மிகப் பெரிய வலிய சரியான காரணம் வேண்டும். நலம் செய்வதாயின், எவருக்கும் எதுவும் ஆராயாமலே நலம் செய்யலாம். ஆனால் ஒருவனுக்குத் தண்டனை தருவதாய் இருந்தாலோ, பல காலம் பல முறைகளில் தீரத் தெளிய ஆராய்ந்து பார்த்து, மன்னிக்க இயலாத மாபெரும் குற்றமே செய்துள்ளான் என்று அய்யத்திற்குச் சிறிதும் இடமின்றிச் செவ்விதின் தெளிந்து உறுதி செய்துகொண்ட பின்னர்தான், தண்டித்தல் வேண்டும். அதுவும் கூட, அவனைச் செயல் நன்றாகத் திருத்திக் காப்பாற்றி அருளுவதன் பொருட்டே, கடிதோச்சி மெல்லத் தண்டித்தல் வேண்டும்.

ஆதலின், பெருமாள், இரணியனின் பகைமை வெளிநோக்கில் மேல்போக்காக அமைத்ததோ அல்லது உள்ளத்திலேயே பெரிதும் ஆழ்ந்து படிந்து கிடந்ததோ என்று, நன்கினிது தீரத் தெளிய ஆராய்ந்து பார்ப்பதற்காகவே, இரணியனின் அகல்மார்பம் கீண்டு நோக்கி, அதன் பின்னரே இரணியனைக் கொன்றார் என்பது, இப்பாசுரத்தின் இனிய அரிய நுண் பொருளாகும். ''உளந்தொட்டு இரணியன் ஒண்மார்பு அகலம் பிளந்திட்ட'' என வரும் பெரியாழ்வார் திருமொழியிலும், ''உளந்தொட்டு'' என வருதல் இக்கருத்தினை அரண் செய்து வலியுறுத்தியிருத்தல் உணர்ந்து மகிழத்தக்கது. இதனால் பெருமாளுக்கு நிக்கிரகம் செய்து தண்டிப்பதில் அல்லாமல், அநுக்கிரகம் ஆகிய அருள் செய்வது ஒன்றிலேயே, அதிகமான பெருநோக்கு என்பது தெளியலாம். இத்தகைய நல்லருட்டிறன் நரசிங்கப் பெருமாளின் திருவவதாரத்தில் சிறப்புற அமைந்து திகழ்கின்றது என்பது பெரியோர்களின் துணிபு.

முடிவுரை:

அருளுருவாய் அமைந்து திகழும் சிங்கப்பிரான் (1) லட்சுமி நரசிம்மர், (2) யோக நரசிம்மர், (3) சத்திராந்த நரசிம்மர், (4) உக்கிர நரசிம்மர், (5) வராக நரசிம்மர், (6) பார்முலிதிநரசிம்மர், (7) பிரகலாத நரசிம்மர், (8) பார்க்கவ நரசிம்மர், (9) காரங்கி நரசிம்மர் என ஒன்பது வகைகளில் சிங்கவேள் குன்றம் என்னும் திவ்விய தேசத்தில், நவ நரசிம்மராக எழுந்தருளிக் காட்சி தரும் சிறப்பு, அன்பர்கள் அனைவரும் தரிசித்து மகிழற்பாலது.

''நாதனை நரசிங்கனை நவின்று
ஏத்துவார்கள் உழக்கிய
பாத தூளி படுதலால், இவ்
வுலகம் பாக்கியம் செய்ததே''

—பெரியாழ்வார்.



## திருவாசகத்தின் பெருமை

''தமிழ் மொழியின்கண் உள்ள பக்தி இலக்கியங்களில், திருவாசகத்தை விடச் சிறந்துயர்ந்த பெருநூல், திண்ணமாக வேறு எதுவும் இல்லை. ஞான நலத்திலும், திருவருட் சிறப்பிலும், உயரிய உணர்வு எழுச்சியிலும், ஆழ்ந்தமைந்த பக்தி உணர்விலும், ஆன்மிக அமைதி தூய்மை ஆகியவைகளில் அளவற்ற தணியாத வேட்கையிலும், உயிர்க்கு நலம் விளைவித்து உய்ய வைத்து உயர்த்துகின்ற இறையருளின் நம்பிக்கைத் தெளிவிலும், திருவாசகத்திற்கு இணையாக ஒரு நூல், இருத்தல் அரிது. அறிவுநெறி ஒழுக்கநெறித் திகைப்புத் தடுமாற்ற அலைகளால், பலவகைகளில் தாக்குண்டு தத்தளிக்கின்ற மனித உயிரும் உள்ளமும், திருவாசகத்திலேயே தம்முடைய ஆறுதற் புகலிடத்தைக் கண்டுணர்ந்து, தேடி அடைகின்றன.''

—தமிழாக்கம் ந. ரா. முருகவேள்.

"There are few works in Tamil devotional literature, that compare with, certainly none that excel the Thiru-Vachakam, in light and grace, in lofty feeling and fervid piety, in passionate longing for spiritual peace and purity, and in the uplifting faith in divine grace in which the human soul, tossed about on the stormy billows of intellectual and moral puzzles, finds a haven of rest."

—'Manonmaniyam',
**Prof. P. Sundaram Pillai,** M.A.,F.R.A.S.

# தல வரலாற்றுக் குறிப்புகள்...

ந. ரா. முருகவேள், M.A.,M.O.L.

**திருவேட்களம் :**

சிதம்பரம் இருப்புப் பாதை நிலையத்திற்குக் கிழக்கே அருகில் இருப்பது. அண்ணாமலைப் பல்கலைக் கழகம் அமைந்துள்ள இடமே திருவேட்களம் ஆகும். அருச்சுனனுக்குச் சிவபிரான் பாசுபதம் கொடுத்த தலம். சுவாமி பாசுபதேசுவரர். அம்பிகை நல்ல நாயகி. கோயிலில் அருச்சுனன் திருவுருவமும், பாசுபதம் ஏந்திய சுவாமியின் திருவுருவமும் உள்ளன. வைகாசி விசாக நாளில், இறைவன் வேடனாக வந்து அருச்சுனனுடன் போர் புரிந்து பாசுபதப் படை நல்கும் விழா நடைபெறுகின்றது. அப்பர், சம்பந்தர், பாடல் பெற்றது.

**திருநெல்வாயில் :**

சிதம்பரம் இருப்புப் பாதை நிலையத்தில் இருந்து தென்கிழக்கே 1.5 கல் தொலைவிலும், அண்ணாமலை நகருக்குத் தெற்கே ஒரு கல் தொலைவிலும் உள்ளது. சம்பந்தர் பாடல். சுவாமி உச்சிநாதர். அம்மை கனகாம்பிகை.

**திருக்கழிப்பாலை :**

இத்தலம் முன்னர்க் கொள்ளிடத்தின் வடகரையில் காரைமேடு என்னும் இடத்தில் இருந்து வந்தது. கொள்ளிடத்தில் வெள்ளம் பெருகிப் பழுதுபட்டதனால் இப்போது திருநெல்வாயில் என்னும் சிவபுரியில், சிதம்பரம் இருப்புப் பாதை நிலையத்திற்குத் தென்கிழக்கிற் சுமார் 3 கல் தொலைவில் படுகை முதலியார் குடும்பத்தில் திரு பழநியப்ப முதலியார் என்னும் சிவபுண்ணியச் செல்வரால், புதிய கோயில் கட்டி அமைக்கப் பெற்றுள்ளது. வான்மீகி முனிவர் பூசித்த தலம். சுவாமி பால்வண்ணநாதர். அம்பிகை வேதநாயகி. தலைவனைப் பிரிந்து வருந்தும் தலைவியின் மெலிவு கண்டு, செவிலித் தாய் அல்லது நற்றாய் கூறிய துறையாக அகப்பொருட் சுவையில் திருநாவுக்கரசர் பாடியுள்ள பாடல்கள் மிகவும் சிறப்புடையவை. அப்பர், சம்பந்தர், சுந்தரர் பாடல்.

**திருநல்லூர்ப் பெருமணம் :**

இதனை ஆச்சாள்புரம் என மக்கள் வழங்குவர். ஆச்சாரியர்கள்புரம் என்பது இங்ஙனம் மருவியதாக அறிஞர்கள் கூறுவர். இது மாயூரத்தில் இருந்து சென்னைக்குச் செல்லும் இருப்புப் பாதையில் கொள்ளிடம் என்னும் நிலையத்தில் இருந்து கிழக்கே 3 கல் தொலைவில் விளங்குகின்றது. திருஞான சம்பந்தருக்குத் திருமணம் நிகழ்ந்ததும், அவர் தம் திருமணத்தில் தம் மனைவியாரோடும் அடியார் குழாங்களோடும் இறையருளால் தோன்றிய சோதியிற் சென்று கலந்து முக்தி எய்தியதும் இத்தலமேயாகும். அதனால் இதற்கு மணவை என்றும், முத்திபுரம் என்றும் பெயர்கள் உண்டு. திருஞான சம்பந்த சுவாமிகளின் திருமணத்தின் போது, அம்பிகை தோன்றி அங்குக் கூடியிருந்த அனைவருக்கும் திருவெண்ணீறு அளித்துச் சோதியுட் புகுவித்த தலம் ஆதலின் ஆயாள் புரம், ஆச்சாள்புரம் எனப் பெயர் பெற்றது என்றும் கூறுவர். அம்பிகைக்கு இங்குத் திருவெண்ணீற்று உமை என்று பெயர். வசிட்டர் விசுவாமித்திரர் முதலிய முனிவர்களுக்கு இறைவன் சிவலோகக் காட்சி யளித்தமையின், சுவாமி சிவலோகத் தியாகர் எனப்படுவார். திருஞான சம்பந்தரின் திருமணத்தில் தோன்றிய சிவசோதியைக் கண்டு அஞ்சி ஓடிய அபக்குவர்களையும் கூட, இறைவன் நந்தியம் பெருமானால் மறித்து வெருட்டித் திரும்பி வரச் செய்து சிவசோதியுட் புகுவித்து முத்தி எய்துமாறு அருள் புரிந்தார். இதற்கு அடையாளமாக நந்தி வெருட்டி, நந்தி மடு என்ற பெயர்களுடைய இடமும் மடுவும் இங்கு உள்ளன. 'காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி' என்னும் பொது நமச்சிவாயத் திருப்பதிகம் திருஞான சம்பந்தரால் அருளிச் செய்யப் பெற்ற தலம் இதுவே. இங்குள்ள நடராசர் பண்பதைக்க ஆடும் நாயனார் எனக் கல்வெட்டுகளில் குறிக்கப் பெற்றுள்ளார். திருஞான சம்பந்தரின் மனைவியார் பெயர் 'சொக்கியார்' என்றும் கல்வெட்டுக்களில் குறிக்கப்பட்டுள்ளது. தல விருட்சம் வில்வம். ஆச்சாமரம் என்றும் கூறுவர். கி.பி. 1749இல் இங்கு ஆங்கிலேயருக்கும் தஞ்சை மன்னன் படைகளுக்கும் ஒரு பெரும் கடும்போர் நிகழ்ந்தது. அதுபோது லாரென்ஸ் என்னும் ஆங்கிலேயர் இக்கோயிலைக் கைப்பற்றிக் கொள்ள முயன்றபோது புனிதமான இடங்களையும் பொருள்களையும் அழிக்காமல் இருக்கும்படி வேண்டிக் கொண்டு, இங்கிருந்த கோயிலைத் திறந்து விட்டனர் என்று, தஞ்சை மாவட்டச் செய்தி நூல் தெரிவிக்கின்றது. அம்மன் கோயிலைக் கட்டியவர் 'சந்திரசேகரன் பஞ்ச நதிவாணன்' எனக் கல்வெட்டுக்கள் அறிவிக்கின்றன. இது திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்தின் பரிபாலனத்திற்கு உட்பட்ட கோயில்களுள் ஒன்று. கொட்டையூர்ச் சிவக்கொழுந்து தேசிகர் இயற்றிய தல புராணமும், மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை பாடிய திருவெண்ணீற்றுமை பிள்ளைத் தமிழ் முதலியனவும், இத்தலத்தின் இலக்கியங்க

ளாகும். தீர்த்தம் பஞ்சாக்கர தீர்த்தம் முதலியன. சம்பந்தர் பதிகம்.

### திருமயேந்திரப்பள்ளி :

இது கோயிலடிப் பாளையம் என வழங்கும். மஹேந்திரன் என்னும் ஓர் இந்திரன் வழிபட்ட காரணத்தால் மயேந்திரப் பள்ளி எனப் பெயர் பெற்றது. ''சந்திரன் கதிரவன் தருபுகழ் அயனொடும் இந்திரன் வழிபட இருந்த எம் இறையவன், மந்திரம் மறைவளர் மயேந்திரப் பள்ளியுள் அந்தமில் அழகனை அடிபணிந் துய்மினே'' என்பது சம்பந்தர் தேவாரம். சந்திரனும் சூரியனும் பிரமனும் கூட இங்குப் பூசித்துப் பேறு பெற்றனர். சுவாமி திருமேனி அழகர். அம்மை வடிவாம்பிகை. இத்தலம் ஆச்சாபுரத்துக்கு வடகிழக்கே 4 கல் தொலைவில் உள்ளது.

### தென் திருமுல்லை வாயில் :

இத்தலம் சீர்காழிக்குக் கிழக்கே 8 கல் தொலைவில் உள்ளது. தொண்டை நாட்டிலும் திரு முல்லை வாயில் என ஒரு தலம் இருத்தலால் இது தென் திரு முல்லை வாயில் எனப்பட்டது. இங்கு உமாதேவியார் தவம் இருந்து பூசித்துத் தட்சிணாமூர்த்தியினிடம் திருவைந்து எழுத்து உபதேசம் பெற்றனர். இதனை ''அணி கொண்ட கோதையவள் என்றும் ஏத்த அருள் செய்த எந்தை'' எனவரும் சம்பந்தரின் திருக்கடைக்காப்புப் பாடல் கொண்டு உணரலாம். தேவேந்திரன் சுதர்மன் முதலானோர் பூசித்தனர். சுவாமி முல்லைவன நாதர். தேவி கோதையம்மை.

### திருக்கலிக்காமூர் :

இஃது அன்னப்பன்பேட்டை என இந்நாளில் வழங்குகின்றது. மாயூரம் நிலையத்தில் இருந்து வடகிழக்காய்த் திருவெண்காடு சென்று அங்கிருந்து வடகிழக்காய் மூன்று கல் தொலைவில் உள்ளது. சுவாமி சுந்தரேசர். தேவி அழகம்மை. சம்பந்தர் பதிகம்.

### திருச்சாய்க்காடு :

இது சாயாவனம், பூம்புகார் எனவும் வழங்கும். இது சீர்காழிக்குத் தென்கிழக்கே 9 கல் தொலைவில் உள்ளது. மாயூரத்தில் இருந்து திருவிளநகர் முதலிய தலங்களைத் தரிசித்துக் கொண்டும் இத்தலத்தை அடையலாம். முன்னொரு காலத்தில் இந்திரனின் தாயார் இங்கு வந்து இத்தலத்தைப் பூசித்து வந்தாள். தாயார் மண்ணுலகம் சென்று வழிபட்டு வரும் வருத்தத்தைத் தவிர்க்க இந்திரன் இத்தலத்தினை விண்ணுலகத்திற்கு அகழ்ந்தெடுத்துச் செல்ல முயன்றான். பாதாளம் வரையில் அகழ்ந்து பார்த்தும் அவனால் இதனைப் பெயர்த்தெடுக்க இயலவில்லை. அதனால் அவன் இக்கோயிலைப் புதுப்பித்து, தேவபூசை நிகழ்ந்து வந்ததனை மனிதர்களும் பூசித்து உய்யுமாறு செய்து சிறப்புறுவித்தான். இந்திரன் அகழ்ந்த பொழுது ஆதிசேடனின் பணா மகுட மாணிக்கச் சாயை பரவிய காரணத்தினால், இது சாயா வனம் எனப் பெயர் பெற்று இருக்கலாம். சுவாமி சாயாவனேசுவரர். தேவி குயிலினும் நன்மொழியம்மை. அப்பர் சம்பந்தர் பாடல் பெற்றது. சிவபிரான் இயற்பகை நாயனாரின் மனைவியை உடன்கொண்டு சென்று, பின்னர்க் காட்சி கொடுத்தருளிய தலம் இதுவே.

### திருப்பல்லவனீச்சரம் :

இது காவிரிப்பூம் பட்டினத் துறை பல்லவனீச்சரம் எனப் பெறும். பல்லவ மன்னன் ஒருவன் பூசித்துப் பேறு பெற்றமையால் இப்பெயர் எய்திற்று. இயற் பகை நாயனார், பட்டினத்தடிகள் ஆகிய பெருமக்களின் அவதாரத் தலம். சம்பந்தர் பதிகம். சுவாமி பல்லவனேசுவரர். தேவி சௌந்தர நாயகி. தீர்த்தம் காவிரி. சங்கம தீர்த்தம். இதுசாய்க்காடு என்னும் தலத்திற்குக் கிழக்கே கால் மைல் தொலைவில் உள்ளது.

### திருவெண்காடு :

இது சுவேத வனம் எனவும், சுவேதாரண்யம் எனவும் வடமொழியில் வழங்கப்பெறும். சென்னை-மாயூரம் இருப்புப் பாதையில் சீர்காழி இருப்புப் பாதை நிலையத்தில் இருந்து 9 கல் தொலைவில் உள்ளது. மூர்த்தி தலம் தீர்த்தம் என்ற மூவகைப் பெருமைகளையும் உடையது. சுவேதாரண்யேசுவரர், நடராசர், அகோர சிவர் என்னும் மூன்று மூர்த்திகள்— தீர்த்தங்கள் சோமகுளம், சூர்யகுளம், அக்னிகுளம் என்னும் மூன்று—வடவால் கொன்றை வில்வம் என்னும் மூன்று தலவிருட்சங்கள்—இங்கு மிகவும் சிறப்புடன் திகழ்ந்து வருதலைக் காணலாம். திருப்பெண்ணாகடம் என்னும் நடுநாட்டுத் தலத்தில் வசித்து வந்த அச்சுதகளப்பாளர் என்னும் பெருந்தகையார் ''பேயடையா பிரிவெய்தும்'' எனத் தொடங்கும் திருஞானசம்பந்தர் தேவாரப்படி இங்குள்ள முக்குளநீரில் மூழ்கி இறைவனை வழிபட்டுச் சிவஞான போதம் என்னும் செந்தமிழ் ஞான நூலையருளிய சைவ சித்தாந்த முதற் பெருஞ் சான்றோர் ஆகிய ஆசிரியர் மெய்கண்ட தேவரை மகவாகப் பெற்றெடுக்கும் பேறுபெற்றார். பட்டினத்தடிகள் சிவபூசை பெற்றதும், இந்திரன் பாவம் நீங்கியதும், அய்ராவதம் என்னும் வெள்ளை யானை வழிபட்டுச் சாபம் விலகியதும், சுவேதகேது சுவேதன் முதலியவர்கள் பேறு பெற்றதும் இத்தலமேயாகும். 'விண்ணவர்கோன் வழிபட வெண்காடு இடமா விரும்பினனே' 'நயந்தவர்க்கு அருள் பல நல்கி இந்திரன் கயந்திரம் வழிபட நின்ற' 'வெள்ளானை வேண்டும் வரங்கொடுப்பார் வெண்காடு மேவிய விகிர்தனாரே', 'அயிராவதம் பணிய மிக்கதனுக்கு அருள்சுரக்கும் வெண்காடு'

என வரும் தேவாரப் பாடற் பகுதிகள், இங்கு நினைவு கூர்ந்து மகிழத் தக்கன. மாசி மாதத்தில் இங்கு நடக்கும் திருவிழா இந்திரனே வந்து நடத்துவதாக அய்திகம். அதனால் இந்திர மகோற்சவம் எனப் பெயர் பெறும். அய்ராவதத்தால் அமைக்கப்பட்ட தீர்த்தம் 'யானை மடு' என வழங்கி வருகின்றது.

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள அகோர மூர்த்தி மருத்துவாசுரன் என்பவனின் வலி தொலைக்கத் தோன்றியவர். இவர் திருவுருவத்தில் 14 நாகங்கள் ஆபரணமாக விளங்குகின்றன. இவருடைய வலது கால் கட்டை விரல், இரண்டாவது விரல் ஊன்றி மற்ற பாதம் தூக்கியிருக்கின்றது. அப்பர் சுவாமிகள் இத்தலத்தைப் பற்றிப் பாடிய 'தூண்டுசுடர் மேனி' எனத் தொடங்கும் திருத்தாண்டகத்தில் சொல்லப்பட்டவை அனைத்தும் அகோரமூர்த்தியின் திருவுருவத்திற் காணலாம். எண்தோள் முக்கண் ஈசராக மூவிலைச் சூலம் ஏந்திய கையுடன் திகழும் இவர் தம் திருவடியில், மருத்துவாசுரன் மல்லாந்த நிலையில், சரணாகதி யடைந்து கிடக்கிறான். அகோர வீரபத்திரர் என்பவர் இவரின் வேறு.

இங்குள்ள பெரியவாரணப் பிள்ளையார், சட்டைநாதர், மெய்கண்டார், பொல்லாப் பிள்ளையார், பிள்ளை இடுக்கி அம்மன், பத்திரகாளி, துர்க்கை, பிட்சாடன மூர்த்தி முதலிய பல திருவுருவங்களும் கண்டு களிக்கத் தக்கவை. திருஞானசம்பந்தர் இங்கு வந்த பொழுது 'ஊரெலாம் சிவலோகம் மணலெலாம் சிவலிங்கம்' எனக் கண்டு மிதிக்க அஞ்சிய பொழுது அம்பிகையைக் கூப்பிட, பெரிய நாயகியம்மை சென்று அவரை இடுப்பில் எடுத்து வந்தார். அதனால் 'பிள்ளை இடுக்கி அம்மன்' என்ற பெயர் ஏற்பட்டது. பிள்ளையை இடுப்பில் வைத்துள்ள அம்பாள் திருவுருவம்' பிரம வித்தியா நாயகி கோயிலில், மேற்கு உட்பிராகாரத்தில் இருக்கின்றது.

பட்டினத்தார் துறவு நெறி மேற்கொண்ட பொழுது, அவர் தம் கணக்கராக விளங்கிய சேந்தனார் என்பவரை அடிகளாரின் நிதி முழுவதையும் ஏழை எளியோர் வறியோர் கவர்ந்து கொள்ளும்படி விடுத்தமைக்காக, அரசன் சிறையிலிட்டு வருத்த, அஃது அறிந்த பட்டினத்தார், 'செய்த்தலைக் கயல்பாய் நாங்கூர்ச் சேந்தனை வேந்தன் இட்ட கைத்தளை நீக்கி என்முன் காட்டு வெண்காட்டுளானே' எனப் பாடித் துதிக்க, விநாயகப் பெருமான் சென்று சேந்தனாரின் விலங்கைத் தறித்துச் சிறை விடுத்தார். இங்ஙனம் 'விலங்கு தறித்த விநாயகர்' கோயில், திருவெண்காட்டீசர் கோயிலுக்குத் தென் மேற்கே சிறிது தொலைவில் இருக்கிறது. அப்பர் சம்பந்தர் சுந்தரர் மணிவாசகர் கபிலதேவர் பரணதேவர் முதலிய சான்றோர்கள் இத்தலத்தைத் தம் பாடல்களாற் சிறப்பித்துள்ளனர். சைவ எல்லப்ப நாவலர் திருவெண்காட்டுப் புராணம் பாடியுள்ளார். அப்பர் சம்பந்தர் சுந்தரர் பாடல்.

**கீழைத் திருக்காட்டுப் பள்ளி :**

இது திருவெண்காட்டினின்று மேற்கே ஒரு மைல் தொலைவில் உள்ளது. காவிரிக்குத்தென் கரையில் தஞ்சைக்கு மேற்கே ஒரு திருக்காட்டுப் பள்ளி இருப்பதனால், இது கீழைத் திருக்காட்டுப்பள்ளி எனப் பெயர் பெற்றது. இந்திரன் விருத்திராசுரனைக் கொன்ற பழி நீங்கப் பூசித்த தலம். ''தோலுடையான் வண்ணப் போர்வையினான் சுண்ண வெண்ணீறு துதைந்திலங்கும் நூலுடையான் இமையோர் பெருமான் நுண்ணறிவால் வழிபாடு செய்யும் காலுடையான் கரிதாய பண்டன் காதலிக்கப்படும் காட்டுப்பள்ளி'' எனச் சம்பந்தர் பதிகத்துள் வருவதைக் காணலாம். சுவாமி ஆரணிய சுந்தரர். தேவி அகிலாண்டநாயகி.

**திருக்குருகாவூர் :**

இத்தலம் சீர்காழிக்குத் தெற்கே தென் திருமுல்லை வாயிலுக்குப் போகும் பாதையில் மூன்றாவது கல்லில் தெற்கே திரும்பிச் சென்றால் சுமார் அரை கல் தொலைவில் உள்ளது. சுந்தரர்க்காக இறைவன் தண்ணீர்ப் பந்தர் அமைத்துப் பொதி சோறு அளித்த தலம். ''பாடுவார் பசி தீர்ப்பாய்'' என்றும், 'இத்தனையா மாற்றை அறிந்திலேன்'' என்றும் சுந்தரர் பாடியிருத்தல் காணலாம். சுவாமி வேட வடிவத்துடன் வந்து வழிகாட்டினமையினால் 'வேடனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே' எனச் சுந்தரர் பாடினார். இறைவன் சுந்தரர்க்குப் பொதி சோற்று அமுது ஊட்டிய இடம், வரிசைப் பற்று முதலிய பெயர்களுடன் வழங்கி வருகின்றது. இவ்விழா சித்திரா பௌர்ணமியில் நடைபெறுகின்றது. இக்கோயிலுக்கு வெளியேயுள்ள பாற்கிணறு என்ற ஒரு தீர்த்தம், தை அமாவாசையில் சுவாமி தீர்த்தம் கொடுக்கும் சமயத்தில் பால் போல வெள்ளை நிறம் அடைவது அற்புதமானது. அதனாலேயே சுவாமிக்கு வெள்ளடை நாதர் எனப் பெயர் அமைந்தது போலும். அம்பிகை காவியங்கண்ணி, வெள்ளடை என்பது கோயிலுக்குப் பெயர் ஆகலாம். ''விண்ணமர் பைம்பொழில் வெள்ளடை மேவிய பெண்ணமர் மேனிப் பிஞ்ஞகனாரே'' என்பது சம்பந்தர் தேவாரம். ''காவியங்கண் மடவாள்'' என்னும் தொடரும் சம்பந்தர் தேவாரத்தில் பயின்றுளது.

**சீர்காழி :**

திருஞானசம்பந்தர் அவதரித்த தலம். பிரமன் தனது படைப்புத் தொழில் இடையூறு இன்றி முடிவு பெற வழிபட்டதால் பிரமபுரம்; இறைவன் மூங்கில் வடிவமாகத் தோன்றிச் சூரபன்மனுக்கு அருள் செய்தமையால் வேணுபுரம்; சூரனுக்குப் பயந்த தேவர்கள் புகலிடமாகக் கொண்டு பூசித்தமையினால் புகலி; சுக்கிரன் இயமன் வியாழன் என்போர் குருத்துவம் பெறப் பூசித்ததனால் வெங்குரு; பிரளய வெள்ளத்திலும் அழியாது தோணிபோல மிதந்து, சிவபிரானும் அம்பிகையும் தங்கி

யிருக்கப் பெற்றதனால் தோணிபுரம்; தரையைப் பிளந்து சென்று இரணியாக்கனைக் கொன்ற வராக மூர்த்தி வணங்கியதனால் பூந்தராய்; தலைக்கூறாகிய இராகு இறைஞ்சியதனால் சிரபுரம்; புறா வடிவோடு தன்னைச் சோதிக்க வந்த அக்கினி தேவனால் சிபிச் சக்கரவர்த்தி நற்கதி யடைந்தமையால் புறவம்; சண்பைப் புல்லால் மாய்ந்த தங்குலத்தவரால் வந்த பழி தன்னைத் தொடராதிருக்கும்படி கண்ணபிரான் பூசித்ததனால் சண்பை; இறைவனை எதிர்த்து நட வாதம் புரிந்த காளி அக்குற்றம் நீங்கப் பணிந்ததனால் ஸ்ரீகாளிபுரம் (சீகாழி); மச்சகந்தி என்னும் பரதவர் குலப் பெண்ணைப் புணர்ந்த கொச்சையாம் பழிச் சொல் நீங்கப் பராசரர் பரவியதனால் கொச்சைவயம்; எங்கும் கழியாத கொடிய மும்மலத் தொகுதியைக் கழுவித் தொலைக்க உரோமச முனிவர் உள்ளுருகித் தொழுததனால் கழுமலம் என்னும் பன்னிரண்டு திருப் பெயர்கள் இத்தலத்திற்கு உண்டு. இப்பெயர்களை யெல்லாம் திருஞான சம்பந்தர் தமது பதிகங்கள் பலவற்றில் முறை பிறழாமற் குறிப்பிட்டுள்ளார். பிரமபுரீசர் என்ற லிங்கம் ஆகிய திருமேனியும், தோணியப்பர் என்னும் குரு ஆகிய திருமேனியும், சட்டைநாதர் என்ற சங்கமம் ஆகிய திருமேனியும் என்னும் மூன்றனுள்ளும் விளங்கிச் சிவபிரான் இங்குத் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியுள்ளார். இரணியனைச் சங்கரித்து எழுந்த நரசிங்கத்தைத் தடிந்து, அதன் தோலைச் சட்டையாக அணிந்த சட்டைநாதர் வரம் அருளும் வள்ளலாய் ஆபதுத்தாரணர் என்னும் பெயருடன் இங்கு வீற்றிருக்கின்றார். அவர் கையில் இருப்பது வாமனரைத் தடிந்து, அவர்தம் முதுகெலும்பைத் தண்டாக ஆக்கிய படை; வெள்ளிக் கிழமை தோறும் நள்ளிரவில் இவருக்கு நியமமாகச் சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது. பைரவர் எட்டு கற்களாய்த் தோன்றி இங்கு விளங்குகின்றார். இவ் அஷ்ட பைரவர்களும் தெற்குப் பிராகாரத்திலுள்ள வலம்புரி மண்டபத்தில் யோக நிலையில் காட்சி தருகின்றனர். இத்தலத்தில் பிரம தீர்த்தம் காளி தீர்த்தம் பராசர தீர்த்தம் முதலிய 22 தீர்த்தங்கள் உள்ளன.

திருநாவுக்கரசர் இங்கு வந்து சம்பந்தரைக் கண்டு மகிழ்ந்து நட்புப் பூண்டார். சுந்தரர் சம்பந்தர் தோன்றியருளிய பதி என்று கருதி, இத்தலத்தை மிதிக்க அஞ்சி நகர்ப் புறத்தே இருந்து வழிபட்டு, இறைவன் காட்சிகொடுக்கப் பெற்று, புற நகரிலேயே ''கழுமல வளநகர்க் கண்டு கொண்டேனே'' என்று பதிகம் பாடிப் போற்றினார். மாணிக்கவாசகர் பாண்டிய நாட்டை விட்டுத் தில்லைக்கு எழுந்தருளும் போது, இங்கு வந்து 'உம்பர்கட்கு அரசே' என்று தொடங்கும் பிடித்த பத்து அருளிச் செய்தார்கள். பட்டினத்தார் 'திருக்கழுமல மும்மணிக்கோவை' பாடியுள்ளார். அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவரான கணநாத நாயனார் இங்குத் தோன்றியருளினார். அந்தணர் குலத்தில் அவதரித்த அவர், அடியார்களைப் பல வகைத் திருப்பணிகளிலும் பயிற்சி கொடுத்துப் பழக்கியருளிய பெருந்தகையார் ஆவர். மச்சுச் செட்டியார் காழிக் கங்கை மெய் கண்டார், சிற்றம்பல நாடிகள், கண்ணுடைய வள்ளலார், திருத்தோணியப்பர், மறைஞான சம்பந்தர், சண்பை ஞானப் பிரகாசர், தருமைச் சிவஞான தேசிகர், மாசிலாமணி தேசிகர், சிதம்பரநாத முனிவர், அருணாசலக் கவிராயர் முதலிய பல சான்றோர்கள் இங்கு அவதரித்துள்ளனர்.

இங்கு வீரராசேந்திரன் (கி.பி. 1055-1070) இரண்டாம் குலோத்துங்கன் (கி.பி. 1133), இரண்டாம் இராசராசன் (கி.பி. 1144) இரண்டாம் இராசாதிராசன் (கி.பி. 1165), மூன்றாம் குலோத்துங்கன் (கி.பி. 1178), மூன்றாம் இராசராசன் (கி.பி. 1216), மூன்றாம் கோப்பெருஞ்சிங்கன் (கி.பி. 1243), வீர விருப்பண்ண உடையார் (கி.பி. 1315), கிருஷ்ண தேவராயர் (கி.பி. 1509), வேங்கட தேவராயர் (கி.பி. 1613) ஆகியோரின் கல்வெட்டுக்கள் 47 உள்ளன. அவைகளில் பலவகை அறக்கட்டளைகளுக்காக நில தானம் முதலியன வழங்கிய செய்திகள் கூறப்படுகின்றன.

இக்கோயில் திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்தின் ஆட்சியிற் பரிபாலிக்கப் பெற்று வருகின்றது. நாள்தோறும் காமிக, காரண, வாதுள, மிருகேந்திர ஆகம விதிப்படி ஆறுகால பூசைகள் நடைபெறுகின்றன. சித்திரை மாதப் பிரம்மோற்சவத்தில் இரண்டாம் திருவிழாவாக நிகழும் திருமுலைப்பால் உற்சவம் (ஞானசம்பந்தருக்கு அம்பிகை ஞானப்பால் கொடுத்தருளிய விழா) மிகவும் சிறப்பானது. மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் சீர்காழிக் கோவை என்னும் சிறந்த நூலைப் பாடியுள்ளார்கள். சுவாமி பிரமபுரீசர், தோணியப்பர்-அம்பிகை திருநிலை நாயகி, பெரிய நாயகி.

**திருக்கோலக்கா :**

இது சீர்காழிக்கு மேற்கே ஒரு நாழிகை தொலைவில் உள்ளது. திருஞான சம்பந்தர் ஞானப்பால் உண்டபின், அடுத்த நாளிலேயே தமது முதல் யாத்திரை செய்த தலம். ''மடையில் வாளை'' என்னும் பதிகத்தினைச் சம்பந்தர் தமது கைகள் வருந்தும்வண்ணம்தாளம் இட்டுப் பாடுதல் கண்டு சிவபிரான் அவருக்கு அய்ந்தெழுத்து எழுதிய பொற்றாளம் கொடுத்த தலம். அம்மையார் ஓசை கொடுத்த காரணத்தால் ஓசை கொடுத்த நாயகி எனப் பெறுவர். சுவாமி தாளம் கொடுத்த காரணத்தால் திருத்தாளம் உடையார் எனப் பெறுவர். சத்தபுரீசர் என்றும் கூறுவர். சம்பந்தருக்கு இங்கு இறைவன் பொற்றாளம் கொடுத்த செய்தியினைச் சுந்தரர் தமது திருக்கோலக்காத் திருப்பதிகத்தின் 8ஆம் பாட்டிற் குறிப்பிட்டுப் போற்றியருள்கின்றார்.

**புள்ளிருக்கு வேளூர் :**

இது வைத்தீசுவரன் கோயில் என வழங்கும். புள் (சடாயு), இருக்கு (இருக்கு வேதம்), வேள் (முருகன்), ஊர் (சூரியன்) என்னும் நால்வரும் பூசித்துப் பேறு பெற்றதனால், இதற்குப் புள்ளிருக்கு வேளூர் எனப் பெயர் அமைந்தது. ''மந்திரமும் தந்திரமும் மருந்தும் ஆகித் தீரா நோய் தீர்த்தருள வல்லான்'' ஆக இங்குச் சிவபிரான் எழுந்தருளி விளங்குதலால் வைத்தீசுவரன் (வைத்தியநாதன்) கோயில் என்று மக்கள் இதனை வழங்கி வருகின்றனர். சுவாமி வைத்தியநாதர். அம்பிகை தையல் நாயகி. தீர்த்தம் சித்தாமிர்த தீர்த்தம். முருகன் செல்வ முத்துக் குமாரசாமி என வழங்கப் பெறுவர். தல விருட்சம் வேம்பு. இது அங்காரகன்(செவ்வாய்) தலம். இத்தலத்தை வழிபடுவோர்க்குக் கோள்களினால் விளையும் தீங்குகள் ஒன்றும் நேரா. அதனால் இத்தலத்தில் நவக்கிரகங்களும் ஒரே வரிசையாய் அமைக்கப் பெற்றுள்ளன. நேத்திரப் பிடி சந்தனம், சடாயு குண்டம், திருச்சாந்துருண்டை என்பன இங்கு மிகவும் புகழ் பெற்றவை.

விக்கிரம சோழன் (கி.பி.1117), வீரராசேந்திர பாண்டியன், அச்சுதப்ப நாயக்கர், துளசா மகாராசர் (சகம் 1689) முதலியவர்களின் கல்வெட்டுக்கள் 8 இங்குக் காணப்படுகின்றன. இங்குப் பழைய பல்லவச் சிற்பங்களும், பாளங்கள் நிறைந்த தூண்களும், அம்மன் கோயில் தட்டஞ் சுற்றி மண்டபத்தில் பிரதாப சிம்ம மகராசா, பத்தாவது மகாசந்நிதானம் ஆக விளங்கிய ஸ்ரீ சிவஞான தேசிகர் ஆகியோர் திருவுருவச் சிற்பங்கள் உள்ளன. இது தருமபுர ஆதீனக் கோயில்களுள் ஒன்றாகச் சிறந்து விளங்குவது.

**திருக்கண்ணார் கோயில் :**

இது குறுமாணக்குடி என்று வழங்கும். வைத்தீசுவரன் கோயில் நிலையத்திலிருந்து மாயூரம் போகிற பாதையில், மூன்றாவது மைலில் உள்ள கதிராமங்கலத்திற்கு அருகேயுள்ளது. ஆனதாண்டவபுரம் வழியாகவும் இங்குச் செல்லலாம். கௌதம முனிவரால் சபிக்கப் பெற்ற இந்திரன் பூசித்துத் தன் உடலிற் பொருந்திய குறிகள் கண்களாக மாறப் பெற்றதனால் கண்ணார்கோயில் எனப் பெயர் பெற்றது. ''முன் ஒரு காலத்து இந்திரன் பெற்ற முனி சாபம், பின் ஒரு நாள், அவ்விண்ணவர் ஏத்தப் பெயர் வெய்தித் தன் அருளாற் கண் ஆயிரம் ஈந்தோன் சார்வு என்பர். கன்னியர் நாளும் துன்னமர் கண்ணார் கோயிலே' எனச் சம்பந்தர் தேவாரம் இவ்வரலாற்றைக் கூறுகின்றது. வாமனாவதாரம் செய்த திருமாலும் இங்கு வழிப்பட்டனர். அதனையே 'குறுமானக்குடி' என்னும் பெயர் சுட்டுகின்றது. 'மறுமாண் உருவாய் மற்று இணையின்றி வானோரைச் செறுமாவலிபாற் சென்று உலகெல்லாம் ஆளவிட்ட குறுமாண் உருவன்தற்குறியாகக் கொண்டாடும் கறுமாகண்டன் மேயது கண்ணார் கோயிலே' எனச் சம்பந்தர் தேவாரத்தில் வருதல் காணலாம். சுவாமி கண்ணாயிரநாதர். அம்மை முருகுவளர் கோதை. தீர்த்தம் இந்திர தீர்த்தம்.

**திருக்கடைமுடி :**

இது கீழூர், கீழையூர் என வழங்குகின்றது. மாயூரம் மார்க்கத்தில் திருநனி பள்ளிக்கு வடமேற்கே ஒரு கல் தொலைவில் உள்ளது. ஆனதாண்டவபுரத்தில் இறங்கித் திருநின்றியூரை அடைந்தும் இங்குச் செல்லாலம். காவிரியின் கடைமுடியான இடமாதலின் கடைமுடி எனப் பெற்றிருத்தல் கூடும். 'பொன்திகழ் காவிரிப் பொருபுனல் சீர்சென்றடை கடைமுடி' எனச் சம்பந்தர் தேவாரம் இதனைக் குறிப்பிடுதல் இங்குக் கருதத் தகும். பிரமன் பூசித்துப் பேறு பெற்றது. சுவாமி கடைமுடி நாதர். அம்மை அபிராமி யம்மையார்.

**திருநின்றியூர் :**

இது ஆனதாண்டவபுரம் நிலையத்திலிருந்து வடகிழக்கே மட்சாலையில் 2 கல் தொலைவில் உள்ளது. இஃது இலக்குமி பூசித்த தலமாதலின் திருநின்றியூர் எனப் பெயர் பெற்றது. பூம்புகாரினின்றும் அத்தயாம தரிசனத்துக்கு நியமமாகச் செல்லும் ஒரு சோழனுக்கு திரி (தீவர்த்தி) நின்று சிவலிங்கப் பேரொளி தோன்றிய காரணத்தால் திரிநின்றவூர் என்பது மருவி வழங்கப்படுவதாகவும் தல வரலாறு கூறும். அப்பர் சம்பந்தர் சுந்தரர் பாடல். சுவாமி மகாலட்சுமிநாதர், அம்மை உலகநாயகி.

**திருப்புன்கூர் :**

'திருநாளைப் போவார்' என்னும் நந்தனார் பொருட்டு இறைவன் நந்தி தேவரைச் சற்றே விலகியிருக்கும்படிச் செய்த தலம். திருக்கோயிலில் மேற்பால் நந்தனார் அகழ்ந்து திருப்பணி செய்த திருக்குளம் இன்றும் உள்ளது. அவர் அவதரித்த ஆதனூர் இதற்குத் தென்கிழக்கில் 2 கல் தொலைவில் இருக்கின்றது. சுந்தர மூர்த்தி சுவாமிகள் இறைவனைத் தூது அனுப்பியது கேட்டு, அவரை வெறுத்துப் பின்பு இறைவனால் அவருடைய நண்பராகப் பெற்ற ஏயர்கோன் கலிக்காம நாயனர் ''அதிகமாயின திருப்பணி அநேகமும் செய்த'' அபிமானத் தலம் இது. இந்நாயனார் தலமாகிய திருப்பெருமங்கலம் இதற்கு வடக்கே ஒரு கல் தொலைவில் உள்ளது. வைத்தீசுவரன் கோயிலின் (புள்ளிருக்கு வேளூர்) தென்மேற்கில் 2 கல் தொலைவில் உள்ள இத்தலத்தினைச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஏயர்கோன் கலிக்காமருடன் சென்று தரிசித்து மகிழ்ந்தார். சுவாமி சிவலோகநாதர். அம்மை சொக்க நாயகி. இத்தலத்தையும் திருநீடுரையும் ஒரே பதிகத்துட் சேர்த்து அப்பர் சுவாமிகள் திருத்தாண்டகம் அருளிச் செய்துள்ளார்.

## திருநீடூர் :

இது 'செல்வம் நீடு ஊர்' என்றும், 'புகழ் நீடுஊர்' என்றும், 'திருநீடுஊர்' என்றும் பல வாறு பொருள் விரித்துப் போற்றப் பெற்ற சிறப்புடையது. எக்காலத்தும் அழிவு இன்றி நீடியிருந்து விளங்குதலின் நீடூர் எனப் பெயர் பெற்றது எனவும் கொள்ளலாம். இது வகுளா ரண்யம், மகிழ வனம் எனவும் தல விருட்சம் பற்றி வழங்கப் பெறும். முனையாடுவார் நாயனார் அவதாரத் தலம். சுந்தரர் இவ் வழியே செல்லுங்கால் இதனைப் பணியாது சென்று பின்பு இறையருள் நினைப்பூட்ட நினைந்து, இங்கு வந்து பணிந்து மகிழ்ந்தார். இது பற்றியே அவர் 'நீடூர்ப் புனிதனைப் பணி யாவிடலாமே?' என வியந்து வினவும் முறையில் பாடல்களை அருளிச் செய்துள்ளார். இந்திரன் சந்திரன் தன்மசுதன் காளி முதலானோர் வழி பட்டு உயர்ந்த தலம். சந்திர புட்கரிணி இந்திர தீர்த்தம் முதலிய 9 தீர்த்தங்கள் இங்கு உள்ளன. சுவாமி அருட் சோமநாதர், கான நிருத்த சங்கரர். அம்பிகை வேயுறு தோளி யம்மை, அதிகாந்தியம்மை. நீடூர் என்னும் இருப்புப் பாதை நிலையத்திலிருந்து வட மேற்கே ஒரு கல் தொலைவில் உள்ளது. சுந்தரர் பாடல்.

## திருஅன்னியூர் :

இது 'பொன்னூர்' என்று வழங்குகின்றது. வருணன் பூசித்தது. திருநீடூரினின்று மேற்கே மூன்று கல் தொலைவில் உள்ளது. சுவாமி ஆபத்சகாய ஈசுவரர், தேவி பெரிய நாயகி. தீர்த்தம் வருண தீர்த்தம்.

## திருவேள்விக்குடி :

இத்தலம் மாயூரத்தை யடுத்த குத்தாலம் நிலையத்தில் இருந்து வடகிழக்கே 2 கல் தொலைவில் உள்ளது. இது சிவபெருமானது திருமண வேள்வி நடந்த தலம். 'திருவேள்விக் குடிச் செழுந்திரு மணவாளநற் கோலம்' என்பர் சேக்கிழார் சுவாமிகள். திருத்துருத்தி யோடு சேர்த்துச் சம்பந்தராலும் சுந்தரராலும் பாடப்பெற்றுள்ளது. பகற் காலத்தில் வேள்விக் குடியிலும், இரவு திருத்துருத்தியிலும் சிவபெரு மான் எழுந்தருளியிருப்பதாகப் பதிகங்கள் கூறு கின்றன. சுவாமி கலியாணசுந்தரர், தேவி பரிமளகந்த நாயகி.

## திருஎதிர்கொள்பாடி :

இது மேலைத் திருமணஞ்சேரி எனப்படும். மணக் கோலத்தோடு வந்த அரசகுமாரன் ஒருவனை இறைவர் மாமனார்போலக் காட்டி எதிர்கொண்டு அழைத்துச் சென்றதனால், எதிர்கொள்பாடி எனப் பெயர் எய்தியது. அய்ராவதம் பூசித்த தலம். சுவாமி அய்ராவ தேசுவரர். அம்மை மலர்க் குழல் நாயகி. வேள்விக் குடியினின்று வடக்கே கரை வழியாய் 1.5 கல் தொலைவில் இருக்கின்றது. ''மத்த யானை ஏறி மன்னர் சூழ வருவீர்காள் செத்த போதில் ஆரும் இல்லை சிந்தையுள் வைம்மின் கள்' எனச் சுந்தரர் பாடிய திருப்பதிகம் பெற்றது.

## திருமணஞ்சேரி :

மன்மதன் பூசித்துப் பேறு பெற்ற தலம். வணிகப் பெண்கள் இருவர் தங்கள் சந்ததி களுள் கொண்டும் கொடுத்தும் சம்பந்தம் செய்து கொள்ள உடன்பட்டிருக்க, ஒருத்தி வயிற்றிற் பிறந்தது ஆமையாக இருக்கக் கண்டு மற்றவள் பெண் கொடுக்க மறுக்கவே, அந்த ஆமை பூசித்து மனித உருவம் பெற்று அப் பெண்ணை மணக்கும் பேறு பெற்றதனால், இஃது இப்பெயர் எய்திற்று. சுவாமி அருள் வள்ளல்நாதர். அம்மை யாழினும் மென்மொழி யம்மை.

## திருக்குறுக்கை :

இத்தலம் மாயூரத்துக்கு வடக்கேயுள்ள நீடூர்ப் புகைவண்டி நிலையத்தில் இருந்து வட மேற்கே சுமார் 5 கல் தொலைவில் உள்ளது. கடுக்காய் மரம் தல விருட்சம் ஆதலின் கடுக வனம். இறைவன் அம்மையைப் பிரிந்து யோகம் புரிந்ததனால் யோகீசபுரம். காமனைத் தகித்த இடமாதலின் காமதகனபுரம். தீர்க்கவாகு முனிவர் இத்தலத்திற்கு வந்து இங் குள்ள தீர்த்தத்தினைப் புறக்கணித்து, இறை வனின் அபிடேகத்திற்குக் கங்கை நீரினை விரும்பித் தனது கரங்களை நீட்டக் கரங்கள் நீளாது குறுகினமையால் குறுக்கை எனப் பல பெயர்கள் வழங்குகின்றன. இஃது அட்ட வீரட்டத் தலங்களுள் ஒன்று. இறைவன் மன்ம மதனை எரித்த வீரச் செயலை நிகழ்த்திய தலம்.

தேவர்கள் வற்புறுத்தித் தூண்டி அனுப் பியபடி, யோக நிலையில் இருந்த இறைவன் மீது மலர் அம்பு எய்தி மயக்கி யோகத்தைக் கலைக்க மன்மதன் வருகின்றான். அவன் வரும் கருத்தை யுணர்ந்த இறைவன், அந்தோ! நாம் விழித்து நோக்கின் இவன் அழிந்து படு வனே! என மனம் இரங்கி மேற்குத் திசை திரும்பினார். ஊழிற் பெருவலி யாவுள? முன் புறம் சென்றால் நான் அழிந்தொழிவேன் என எண்ணி, மறைந்திருந்து மலரம்பு எய்ய மன் மதன் மேற்குத் திசை வந்தான். இறைவன் சிறிதே புன்முறுவல் பூத்து, நெற்றி விழியால் நோக்கினார். மன்மதன் அஞ்சி நடுங்கிச் சிறிது தென்புறம் ஓடினான். நுதல்விழிச் செந்தீ நேருறப்பட்டது. மன்மதன் உடல் எரிந்த சாம்பர் ஆயிற்று. அவன் இரதம் கொடி முதலியனவும் அழிந்தன.

மன்மதன் பாணம் எய்வதைப் பார்க்க வந்த தேவர்கள் கூடியிருந்த இடம் தேவனூர் எனவும், மன்மதன் இறைவனை மலரம்பால் மயக்கித் திரும்புவேன் எனக் கங்கணம் கட்டிய இடம் கங்கணம்புத்தூர் எனவும், தன் கரும்பு வில்லை வளைத்த இடம் வில்லியல்நல்லூர் எனவும், கால் வளைத்துக் குறி பார்த்த இடம் கால்வளைமேடு (காவாள மேடு) எனவும்,

பஞ்சபாணம் எய்யா நின்ற இடம் பஞ்சபாண நல்லூர் (அய்வாள் நல்லூர்) எனவும், சோர்ந்து வீழ்ந்த இடம் சோர்ந்தமங்கலம் எனவும், கூற்று வன் வசித்த இடம் கூற்றுவன் வாழ்க்கை (கூத்தூர்வாழி) எனவும், சிவபிரானின் இவ் வீரச் செயலை யுணர்த்தும் இனிய சான்றுக களாக இன்றும் விளங்கி வருகின்றன.

சுவாமி கர்ப்பக் கிருகத்தின் வடபுறத்தில் காமன் தேரில் வருதல், பாணம் எய்தல், இறைவன் யோகத்தில் இருத்தல் முதலிய காம தகன வரலாற்றுச் சிற்பங்கள் செதுக்கப்பட் டிருக்கின்றன.

இங்குள்ள விநாயகருக்குக் குறுங்கை விநாயகர் என்று பெயர். பிரமன் விஷ்ணு இந்திரன் இரதி மன்மதன் காளி துர்க்கை முருகன் அகத்தியர் முதலிய பலர் இங்கு வழி பட்டுப் பேறு பெற்றனர். சூல தீர்த்தம் ஞான தீர்த்தம் முதலிய பல தீர்த்தங்கள் இங்கு உண்டு.

திருநாவுக்கரசர் அருளிய இரண்டு திருப் பதிகங்கள் இதற்கு உண்டு. அவற்றுள் ஒவ் வொரு பாடலும் மிகச் சுவையும் சிறப்பும் வாய்ந்தவை. பிரம தேவர், மார்க்கண்டேயர், சண்டேசுவரர், கோச்செங்கட்சோழர், திரு மால், சாக்கிய நாயனார், கண்ணப்பர், மகா பலி, கணம் புல்ல நாயனார், இராவணன், அருச்சுனன் முதலிய பலரும் வழிபட்டு அருள் பெற்ற செய்திகளும் அட்டமி, முன் சீருடை ஏழு நாளும் இறைவன் கூத்தராய வீதிபோந்த மாட்சியும் ஆகியவை யற்றி, இப்பதிகங்கள் இனிதெடுத்துப் பாடியுள்ளன. மகாவித்துவான் மீனுட்சி சுந்தரம் பிள்ளை பாடிய தல புரா ணம் ஒன்றும், இதற்கு உண்டு.

தருமபுர ஆதீனத்தின் பரிபாலனத்தில் விளங்கிவரும் இக்கோயிலில், காரண காமிக ஆகமப்படி நாடோறும் நான்கு காலப் பூசை கள் நிகழ்ந்து வருகின்றன. சுவாமி வீரட் டேசுவரர், யோகீசுவரர், அம்மை ஞானாம்பி கை, பூரணியம்மையார்.

**திருக்கருப்பறியலூர் :**

இது மேலைக் காழி என்றும், தலைஞாயிறு என்றும் வழங்கும். திருப்புன்கூரினின்றும், மேற்கே மட் சாலை வழியில் மண்ணிப்பள் ளத்தை அடைந்து அதன் வடக்கே அரை கல் தொலைவில் இத்தலத்தைச் சேரலாம். திரு நாரையூரினின்று கொள்ளிடத்தைக் கலந்து திருக்குரங்குக்கா சென்று அங்கிருந்தும் இதற்கு வரலாம். சம்பந்தரும் அப்பரும் இவ்வழியா கவே இத்தலத்தை அடைந்தனர். வழி கடின மாயினும், தொலைவிற் குறுகியது. இந்திரன் ஒரு காலத்தில் அகந்தையுடன் கயிலைக்குச் சென்றபோது, சிவபெருமான் ஓர் இயக்க வடிவி னுடன் தோன்ற, அவரை அறிந்து கொள்ள மாட்டாதவனாய் இந்திரன் அவரை எதிர்த்துப் போர் செய்ய முற்பட்டான். பின்னர் உண்மை யுணர்ந்து பணிந்து, மன்னிக்கப் பெற்றான். அதனால், சுவாமி குற்றம் பொறுத்த நாதர், அம்மை கோல்வளை நாயகி. தீர்த்தம் இந்திர தீர்த்தம்.

சென்று வழிபடுபவர்களின் கரு அல்லது பிறப்பு இங்கு பறிக்கப்படுதலால், கருப்பறிய லூர் எனக் காரணப் பெயர் பெற்றது. சம்பந் தரும் சுந்தரரும் பாடிய தலம். இங்குள்ள கோயிலைச் சம்பந்தர், சுந்தரர் கொகுடிக் கோயில் எனக் குறிப்பிட்டுள்ளனர். தலவிருட் சம் கொகுடி.(ஒரு வகை முல்லைக் கொடி).

**திருக்குரக்குக்கா :**

இது திருக்கருப்பறியலூரினின்றும் வடக்கே அரைக் கல் தொலைவில் உள்ளது. ''குரக்கினம் குதிகொள்ளும் குரக்குக்கா'' என அப்பர் சுவா மிகள் இதனைக் குறிப்பிட்டுள்ளார். இஃது அநுமான் பூசித்த தலம் எனக் கூறுவர். சுவாமி குந்தளேசுவரர், அம்மை குந்தள நாயகி. அப்பர் பாடல்.

**திருவாழ்கொளிபுத்தூர் :**

இதனைத் திருவாளொளிபுற்றூர் எனவும், திருவாளப்புத்தூர் எனவும் வழங்குகின்றனர். இத்தலம் திருப்புன்கூரினின்றும் மண்ணிப் பள்ளத்தை அடைந்தால், மேற்கே $1\frac{1}{4}$ கல் தொலைவில் உள்ளது. திருமால் வழிபட்ட மாணிக்க லிங்கத்தை யுடைமையால் வடமொழி யில் அரதனபுரம் எனவும் பெயர் பெறும். ''வாழ்கொளிபுத்தூர் மாணிக்கத்தை மறந்து என் நினைக்கேனே?'' என்று சுந்தரர் தமது பதிகத்தின் ஒவ்வொரு பாடலிலும்அருளிச்செய் துள்ளார். இறைவன் அருச்சுனனின் வாளைப் புற்றில் ஒளித்து வைத்துப் பின்னர் அருள் புரிந் தமையின் வாள் ஒளி புற்றூர் எனப் பெயர் அமைந்தது எனத் தலவரலாறு கூறும். சம்பந் தர், சுந்தரர் பாடல். சுவாமி மாணிக்கவண் ணர், தேவி வண்டமர் பூங்குழலி.

**திருப்பழமண்ணிப்படிக்கரை :**

இஃது இலுப்பைப்பட்டு என வழங்கும். இத்தலம் திருவாழ்கொளிபுத்தூரினின்றும் மேற்கே ஒரு கல் தொலைவில் உள்ளது. இங்குச் சிவபெருமான் ஆலால நஞ்சையுண்ட காலத்தில் அம்பிகை அஞ்சிக் கண்டத்தைக் கரத்தால் பற்றி நஞ்சை உள்ளே போகாமல் தடுத்து நிறுத்தியதனால், சிவபெருமான் திரு நீலகண்டம் காட்டியருளினார். 'திருநீல மிடற்று எம்பிரான்' எனச் சுந்தரர் பாடலில் வருதல் காணலாம். பாண்டவர் பூசித்த சிவலிங்கங்கள் அய்ந்து இங்கே இருக்கின்றன. சுவாமி நீலகண்டர், அம்பிகை அமிர்தகரவல்லி.

**திருப்பந்தணைநல்லூர் :**

இங்கு அம்பிகை ஆடிய பந்து அணைந்த காரணம் பற்றி, இஃது இப்பெயர் எய்தியது. தேவ கன்னியரும், தேவப் பசு முதலியனவும் பூசித்த தலம். சுவாமி பசுபதீசுவரர். தேவி யார் காம்பனதோளியார். தலமரம் கொன்றை. பதிகம் 2.

—தொடரும்

# வில்லிபுத்தூரார் பாரதம்

'சிலம்புச் செல்வர்'

திரு. ம. பொ. சிவஞானம் அவர்கள்

மேலவைத் தலைவர்

(முற்றொடர்ச்சி)

சங்க காலத்துக்குப்பின்-அதாவது, களப்பிரர்கள் தமிழகத்தை ஆண்ட காலத்தில் தமிழ் மொழியிலும் தமிழர் வாழ்விலும், ஏற்பட்ட மாறுதல்களைப் பற்றி வரலாற்றுப் பேராசிரியர்கள் கூறுவது வருமாறு:

''சங்க காலம் கழிந்து களப்பிரரும் பல்லவரும் தமிழகத்தில் நுழைந்து அரசியல் செல்வாக்கு எய்திய பிறகு, தமிழரின் பண்பாடுகள் புதிய வடிவங்களில் மலர்வதைக் காணலாம்.

''வடமொழியும், ஆரிய சமயங்கள் தத்துவங்கள் ஆகியவையும், புராணங்களும் தமிழகத்தில் நுழைந்து தமிழர் வாழ்வில் பல புதுமைகளை வளர்த்தன.

''தமிழர் தம் பண்டைய பண்பாடுகளையும், அய்ந்திணை வாழ்வையும், இசையையும் கூத்தையும், சங்க நூல்கள் காட்டிய அறத்தையும், வாழ்க்கை முறைகளையும் மறந்துவிட்டனர்.

''குலப் பிரிவுகளும், பிராமணரின் மேம்பாடும், வடமொழியின் ஏற்றமும், தமிழ் மொழிக் கலப்படமும், தமிழரின் சமூகத்தில் துறைதோறும் ஏற்பட்டன.

''அதனால், தமிழ் மக்களின் பெயர் வடிவங்களிலும், அவர்கள் எண்ணிய எண்ணங்களிலும், வாழ்ந்த வாழ்க்கையிலும் அரசியலிலும் புரட்சிகரமான மாறுபாடுகள் தோன்றின.

''பிறமொழிச் சொற்கள் தமிழ் வடிவு ஏற்றுத் தமிழ்மொழியில் கலப்பதைப் போல அன்னியப் பழக்க வழக்கங்களும் பண்பாடுகளும் சமயக் கருத்துக்களும் தமிழ் மரபுக்கேற்ப உரு மாறித் தமிழரின் சமூகத்தில் எல்லாத் துறைகளிலும் ஆட்சி பெற்றன.''

பல்லவர் ஆட்சியில் வியாச பாரதத்திற்கு ஏற்பட்ட செல்வாக்கு காரணமாகவும் வைணவ சமயம் தமிழ்நாட்டில் வளர்ச்சி பெற்றதெனலாம். இன்னொரு வகையில் சொல்வதானால், வைணவ சமயம் காரணமாகவும், வடமொழியின் மூலமே தமிழ்நாட்டில் வியாச பாரதத்தின் செல்வாக்கு வளர்ந்ததெனலாம். பல்லவர்கள் வடமொழியையே அய்ந்து நூற்றாண்டு காலம் ஆட்சி மொழியாகக் கொண்டிருந்தனராதலால், அந்த மொழியின் வாயிலாகவே வியாச பாரதக் கதை தமிழரிடையே பரவுவது சாத்தியமானது போலும்!

மகாபாரதத்திலே போர்த் தருமங்கள் ஆங்காங்கே வியாசரால் எடுத்தோதப் பெறுகின்றன. ஆனால், தருமத்தின் கட்சியில் நிற்கும் கண்ணனும், தருமனும் யுத்த தருமப்படி நடந்து கொண்டனர் என்று சொல்வதற்கில்லை. பீஷ்மரைப் போர்க்களத்திலிருந்து வெளியேற்றத் தருமன்,'அசுவத்தாமன் இறந்து விட்டான்' என்ற பொய்ச் செய்தியைச் சொல்ல மனமறிந்தே உடன்படுவதும், கர்ணன் நிராயுதபாணியாக இருந்தபோது அவனைக் கொல்லுவதற்குக் கண்ணன் அர்ச்சுனனைத் தூண்டுவதும், யுத்த தர்மத்திற்கு உகந்தவையல்ல. இப்படிப்பட்ட தரும விரோத நிகழ்ச்சிகள் இன்னும் எத்தனை எத்தனையோ! இதற்கு அறிஞர்கள் கூறும் சமாதானம் வருமாறு:

''யுத்தம் துவங்குவதற்கு முன் இருபட்சத்து வீரர்களும் கூடி அந்தக் காலத்துப் பண்பாட்டிற்குப் பொருந்திய பிரதிக்ஞைகளைச் செய்தார்கள்.

''அந்தக் காலத்து யுத்த முறைகளை நினைவில் வைத்துக் கொண்டு படித்தால்தான் பாரதம் விளங்கும். இல்லாவிட்டால் சிற்சில இடங்களில் நிகழ்ச்சிகள் அசம்பாவிதமாகத் தோன்றும்.

''காலப் போக்கில் நியாய அநியாயக் கோட்பாடுகள் மாறுதல் அடையும்.

''அக்காலத்தில் பின்பற்றிவந்த நியமங்களும் அக்காலத்திலேயே சில சமயங்களில், பல காரணங்களினால் புறக்கணிக்கப்பட்டதாகப் பாரதக் கதையில் காணப்படுகிறது. விசேஷ சந்தர்ப்பங்களும் காரணங்களும் கூடி அவற்றால் நியதிகள் சில சமயம் புறக்கணிக்கப்பட்டு வரவர நியதியே அழிந்து போய்ப் புது நியதி உண்டாகும்.

''பாரத யுத்தத்தில் வரம்பு கடந்த செயல்களும் சிற்சில சமயங்களில் நடைபெற்றன.''

தமிழினத்தாருக்கெனத் தனியாக ஒரு போர் முறை உண்டு. அது, மகாபாரதப் போர் முறைகளிலிருந்து சிறிது வேறுபட்டதாகும். அதனை, சிலப்பதிகாரத்தில் காண்கின்றோம்.

சிலம்பிலே, தோல்வியுற்று, துவராடையணிந்து, கையில் மயிற் பீலி ஏந்தி, துறவுக் கோலங்கொண்டோடிய ஆரிய மன்னராம் கனகனையும் விசயனையும் பிடித்து அவர்கள் தலையில் பத்தினித் தெய்வத்தின் படிமத்திற்கான கற்களைச் சுமத்திக் கொண்டு வருகிறான் சேரன் செங்குட்டுவன். இது, தமிழர் போர் முறைக்கு மாறுபட்ட கொடுமை என்பதனை எடுத்துக்காட்டி, இடித்துக் கூறுகின்றனர் சோழ-பாண்டியர்.

தமிழரல்லாதார் ஆட்சியாலும் வைணவ ஆழ்வார்களாலும் புராணச் சொற்பொழிவாளர்களாலும் வியாச பாரதக் கதை தமிழ்நாட்டின் பட்டிதொட்டிகளிலெல்லாம் பரவி, சிற்றிலக்கியங்கள் தோன்றி, பாஞ்சாலி வழிபாடும் ஏற்பட்டிருந்த சூழ்நிலையில்தான் வில்லிபுத்தூரார் வியாச பாரதத்தைத் தமிழில் பாடினார்.

வியாச பாரதத்தை விமர்சிப்பதோ, அதிலே தமிழ்ப் பற்றையும் தமிழ் இனவுணர்ச்சியையும் ஆராய்வதோ எனது குறிக்கோளல்ல. அதற்கு வியாச பாரதம் பயன்படாது. அதனாற்றான், வில்லி பாரதத்தை எடுத்துக் கொண்டேன். ஆயினும், வியாச பாரதத்திற்கும் தமிழர் பண்பாட்டிற்குமுள்ள இடைவெளியை அறிந்து கொண்டால் வில்லி பாரதத்தை ஆராய்வது எளிதாக இருக்கும். அதனாற்றான் வியாச பாரதத்திலும் கவனம் செலுத்த வேண்டிய அவசியமேற்பட்டது.

இனி வில்லிபுத்தூராரின் வரலாற்றையும், தமிழில் அவர் படைத்த பாரதத்தையும் ஆராய்வோம்:

வில்லிபுத்தூரார், பிறப்பால் தமிழர்; தமிழைத் தாய் மொழியாகக் கொண்டவர் சோழ மண்டலத்தின் ஒரு பகுதியான தென்னாற்காடு மாவட்டத்தில் சனியூர் என்னும் ஊரில் பிறந்தவர். ஒரு மகாகவியைப்பற்றி இவ்வளவு தெரிந்துகொண்டால் போதும். இதற்குமேல் தேவைப்படுபவை அவரது காலமும் அக்காலத்திய அரசியல் நிலையுமாகும்.

அய்ரோப்பாவில் ஒரு கவிஞனை-அவன் படைத்த காப்பியத்தை ஆராய, அவன் பிறந்த நாட்டையும் இனத்தையும் காலத்தையும் அறிந்து கொண்டால் போதுமானதாகி விடுகிறது. ஆம்; அங்கு இனத்தைப் பிளவுபடுத்திக் காட்டும் வருண, சாதி, மதப் பாகுபாடுகள் இருக்கவில்லையல்லவா! அதனால், ஜெர்மானிய, கிரேக்க இனங்களைச் சார்ந்த கவிஞர்கள் மனித சமுதாயம் முழுவதற்கும் பயன்படத்தக்க காப்பியங்களைப் படைத்துத் தங்களுக்கும் தங்கள் தாய்மொழிக்கும் தாய்நாட்டுக்கும் தாய் இனத்துக்கும் உலகப் புகழ் தேடி வைத்துப் போயுள்ளனர்.

சாதிகள் மலிந்த-சமயங்கள் நிறைந்த பாரத நாட்டுக் கவிஞர்கள் நிலைவேறு. அவர்களுடைய நாடு, மொழி, இனம், காலம் ஆகிய வற்றை அறிந்து கொள்வது மட்டுமே ஆராய்ச்சிக்குப் போதுமானவையல்ல. அதற்கு மேல் அவர்களுடைய சாதி பற்றியும், மதம் பற்றியும் அறிந்து கொள்ள வேண்டியது அவசியமாகிறது. ஏன், நம்முடைய மகாகவிகளேகூட, உயர்வு தாழ்வுடைய நால்வகைச் சாதிகளை, ஒரு மைப்பாடற்ற சமயங்களைப் புகுத்தித்தான் தங்கள் காப்பியங்களைப் படைத்து வைத்துப் போயுள்ளனர். இதற்கு விலக்காக, வருண வேறுபாடுகளை-சமயப் பாகுபாடுகளைக் கூறாத ஒரே இலக்கியம் திருவள்ளுவர் தந்த திருக்குறளேயாகும். அதனையடுத்து இளங்கோவடிகள் தந்த சிலப்பதிகாரத்திலே சாதி, வருண, சமய வேறுபாடுகள் கூறப்படுகின்றன என்றாலும், அவற்றிடையே சமத்துவமும் சமரசமும் நிலவிய நிலையக் காண முடிகின்றது.

வில்லிபுத்தூரார் சமயத்தால் வைணவர். வில்லிபாரதத்தைப் படித்தால், அவர் கொஞ்சம் வைதிக வைணவர் என்றும் அறிகின்றோம். தாம் பாரதத்தைப் பாடியதற்குக் காரணம் அதன்மூலம் ஆங்காங்கே திருமாலின் புகழ் பாடவும் வாய்ப்புக் கிடைக்குமென்ற மகிழ்ச்சியால்தான் என்று அவரே கூறியுள்ளார். 'மன்னும் மாதவன் சரிதமும் இடை இடை வழங்கும் என்னும் ஆசையால், யானும் ஈது இயம்புவதற்கு இசைந்தேன்!'' என்பது வில்லியின் வாக்கு.

அவர் திருமாலைக் கூறுங்கால், ''எங்கள் மாதவன்'', 'வினையகற்றும் பசுந்துளவோன்' என்றெல்லாம் கூறித் திருமாலிடம் தமக்குள்ள பக்தியைப் புலப்படுத்துகின்றார். மற்றும் ''இரவும் பகலும் பாடுதும் அவன் புகழே'', ''இறக்கும் பொழுதும் மறவேன்'' என்றெல்லாம் பாடித் தாம் ஒரு வைதிக வைணவர் என்பதனை அய்யமற அறிவிக்கின்றார். தமக்கு முன்தோன்றிய நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் ஆகிய வைணவ ஆசாரியர்களையும் தமது பாரதத்தில் பல இடங்களிலே பக்தியோடு குறிப்பிட்டுள்ளார்.

இந்தக் காரணங்களால், சிலப்பதிகாரத்தைப் போன்று சமுதாயக் காப்பியமாக அல்லாமல், முற்றிலும் வைணவ சமயத்துக்கு வாழ்வு தேடும் காப்பியமாகத் தமது வழிநூலைப் படைப்பதே வில்லிபுத்தூராரின் குறிக்கொள் என்பது தெரிகிறது.

வில்லிபுத்தூராருக்கு முன் வைணவ ஆழ்வார்கள் பாடிய பிரபந்தப் பாடல்களால் வைணவ சமயம் தமிழகத்தில் செழிப்புற்று வளர்ந்தது. அவர்கள் காலங்களிலே பல்லவ அரசர்களிலே சிலர் வைணவர்களாக மதம் மாறினர். சில பகுதிகளில் வைணவம் அரசாங்க மதமாகவும் இருந்ததெனலாம். ஆயினும் வில்லி பாரதம் தோன்றிய பின்னர்தான்-புராணப் பிரசங்கிகளால்தான்-வைணவம் தமிழகத்தில் நன்கு ஊன்றிக் கொண்டதெனலாம்.

இதனால், வில்லிபாரத ஆசிரியர் ஆழ்வார் களில் ஒருவராக மதிக்கப்பட்டு ''வில்லிபுத்தூர் ஆழ்வார்'' என்றும் அழைக்கப்படுகிறார்.

வில்லிபுத்தூரார் வைதிக வைணவரா யினும், பிற சமயங்களிடம் காழ்ப்பில்லாதவர். தமிழகத்துக்கே உரிய சைவ சமயத்திடம் நல் லெண்ணமுடையவர். வடிவங்கள் வேறுபட்டா லும், தெய்வம் ஒன்றுதான் என்ற உணர்வு உடையவர். வைணவத் தெய்வமானதிருமாலை யும், வைணவ ஆசாரியர் சிலரையும் பக்தி யோடு பாடியதுபோல, சைவத் தெய்வமான சிவனையும், சைவ ஆசாரியர்களான ஞானசம் பந்தர், சுந்தரர் ஆகியோரையும், சைவத் தலங் களான சிதம்பரம், திருவண்ணாமலை ஆகிய வற்றையும் சைவரைப் போலவே பெருமைப் படுத்திப் பாடியுள்ளார். அவை உரிய இடங் களில் எடுத்துக்காட்டி விளக்கப்படும்.

இனத்தால் தமிழரான காரணத்தால், 'தமிழர்' என்னும் இனவுணர்ச்சியையும் பெற் றிருந்ததால், தமிழர் மதங்களான வைணவத் தையும் சைவத்தையும் சமமாகப் பாவித்தார். அவர், வைணவத்தை வைதிகமாகப் பின் பற்றியது மூர்த்தி பேதங் காரணமாகத்தான். உண்மையில் இந்த மூர்த்தி வேறுபாடு காரண மாகத்தான் இந்து மதம் பிளவுபட்டது. அத னாற்றான், இராம்மோகனர், தயானந்தர், இராமலிங்கர் ஆகிய சீர்திருத்தவாதிகள் மூர்த்தி வேறுபாடுகளைப் புகுத்தி மக்களிடையே சைவம், வைணவம், சாக்தம், கௌமாரம், காணாபத்யம், ஆக்னேயம் எனச் சமய வேறு பாடுகளைப் பெருக்கிய புராணங்களை வெறுப் பவராயினர்.

தமிழர் என்னும் இனவுணர்வுடையோர் சமயங்களிடையே பகைமை பாராட்டமாட் டார்கள். வைணவரான வில்லியாரும் தமிழ் இனவுணர்வு காரணமாகவே சைவத்திடம் காழ்ப்புக் காட்டாத ஒருமைப்பாட்டுணர்வைப் பெற்றிருந்தார் எனலாம்.

—தொடரும்



## திருவாசகச் சிறப்பு

''மாணிக்கவாசகப் பெருமான் அருளிய திருவாசகமானது, அழகிய இனிய பாடல் களில், அறியாமை பேரவா முதலிய அடிமைத் தளைகளினின்று அறுடுபட்டு, அன்பு அறிவு என்பனவற்றின் உரிமை பெற்று, முறை முறையே வளர்ந்து செல்லுகின்ற உயிரின் முன்னேற்ற வளர்ச்சிப் படிநிலைகளை நன்கினிது விளங்கக் காட்டுகின்றது.

உயிரின்பால் முதன் முதலாக உணர்வுக் கண்கள் திறக்கப் பெறுதல். அதனுற் பிறக்கும் உவகை—பெருமிதம்—மனநிலை அலைவுகள் — கையறவு — உலகியலில் நின்று தடு மாறும் உணர்ச்சியியற் போராட்டம் — அமைதியின்மை — இறுதியாக இறைவனை அடைந்து, அடைக்கலம் புகுந்து, எய்துகின்ற அமைதியின்பம் — அருளனுபவம் நலம் — இறைவனோடு இரண்டறக் கலந்து, ஏகனுகி இறைபணி நிற்கும் பேரின்ப நுகர்ச்சியின் பெருமித மகிழ்ச்சிப் பெருக்கம் — ஆகிய வெவ்வேறு பலதிற அனுபவ நிலைகளும், திருவாசகம் என்னும் செழுந் தமிழ்த் தெய்விக திருமறையின்கண் பளிங்கென நிழலாடிச் சுடரொளி வீசி விளங்கித் திகழ் கின்றன.''

—தமிழாக்கம் ந. ரா. முருகவேள்.

"Thiruvachakam depicts in beautiful hymns the progess of the soul from the bondage of ignorance and passion into the liberty of light and love, its first awakening, its joy and exaltation, way wardness and despondency, struggle and unrest, the peace and the joy of union".

**—Rev. Dr. G. U. Pope.**

# தமிழின்பம்

(முற்றொடர்ச்சி)

முத்தமிழ்க் காவலர்
கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள்
திருச்சி.

**அய்ம்பெரும் பண்புகள் :**

தமிழில் பண்டைக் காலத்தில் இலக்கியங்கள் எண்ணிலாதன பல இருந்தன. அவைகள் எல்லாம் காலப் போக்கினாலும், கடல்கோளினாலும், ஆற்றுப்பெருக்காலும், நம் அறிவின்மையாலும் அழிந்தொழிந்து போயின. இப்போது நமக்குப் பழந்தமிழ் இலக்கியங்களாகப் பத்துப்பாட்டு, எட்டுத் தொகை, பதினெண் கீழ்க்கணக்கு என்னும் முப்பத்தாறு (36) நூல்கள் மட்டும்தான், கிடைத்திருக்கின்றன. அவற்றுள்ளும் எத்தனையோ பல பாடல்கள் கிடைக்காமல் போய்விட்டன. இம் முப்பத்தாறு நூல்களின் கருத்துக்களைத் தழுவியே, பிற்கால இலக்கியங்கள் அத்தனையும் தோன்றியிருக்கின்றன. இப்போது தோன்றும், இனிமேல் தோன்றவிருக்கும் நூல்களுக்கும்கூட இவைகள்தான் அடிப்படையாகும். தொன்றுதொட்டு இது வரையில் தோன்றியுள்ள எல்லாத் தமிழ் இலக்கியங்களிலும் ஊடுருவி நிற்கும் கருத்துக்களை எல்லாம், தொகுத்து ஆராய்ந்து சாரமாகப் பிழிந்தெடுத்தால், அவைகளை யெல்லாம் அய்ந்து கூறுகளுள் அடக்கிவிடலாம்.

1. காதல்
2. வீரம்
3. கொடை
4. ஒழுக்கம்
5. இறைவழிபாடு

இவ் அய்ந்து கூறுகளையே தமிழ் இலக்கியங்கள் அனைத்தும், ஒவ்வொரு வகையில் சிறப்புற விளக்கிக் கொண்டிருக்கக் காண்கிறோம். தமிழ் இலக்கியங்கள் மட்டுமே யல்லாமல், உலக இலக்கியங்கள் அனைத்தும்கூடப் பெரும்பாலும் இவ் அய்ந்து கூறுகளிலேயே அடங்கும் என்பதில் அய்யமில்லை. மனிதகுல வாழ்வில் காதல் வீரம் கொடை ஒழுக்கம் இறைவழிபாடு என்னும் அய்ந்துமே மிக்க சிறப்பிடம் பெறுகின்றன. இவ் அய்ந்து பண்பு நலங்களும் நிறைந்து சிறந்து விளங்கும் வாழ்க்கையே, மிக மேலான நல்ல பயன் மிக்க வாழ்வாகும். அதனால்தான் தமிழ் இலக்கியங்கள் அனைத்தும், இவ் அய்ந்தையும் பற்றிச் செவ்விதின் அமைந்து திகழ்கின்றன. எனவே இவ் அய்ந்தையும் பற்றி, இங்கு ஒரு சிறிது இயன்ற அளவில் தனித் தனியே சிந்தித்துத் தமிழ் இன்பத்தில் திளைப்பது, பொருத்தமும் சிறப்பும் ஆகும்.

**(1) காதல்:**

நமது தமிழ் இலக்கியங்களில் காதல் சிறப்பிடம் பெற்றுள்ளது. சங்க கால இலக்கியங்களுள் நற்றிணை குறுந்தொகை அய்ங்குறுநூறு கலித்தொகை அகநானூறு என்னும் இலக்கியங்கள் அனைத்தும், முழுக்க முழுக்கக் காதலைப் பற்றியவையாகவே அமைந்திருக்கக் காண்கின்றோம். இது தமிழுக்கே உரிய ஒரு பெரும் சிறப்பியல்பு. பிற மொழிகளில் புறத்தே உள்ள பொருள்களையும் செய்திகளையும் பற்றியே, மிகுதியான நூல்கள் இருக்கும். அகத்தே பிறர் அறியாமல் நிகழும் ஆழ்ந்த உள்ளுணர்ச்சிகளை அழகுற வெளியிடும் திறன் தமிழிற் போலப் பிற மொழிகளில் அமையவில்லை எனலாம். காதல் என்னும் இயற்கைத் தெய்விக உணர்ச்சியினை, நம் தமிழ் முன்னோர்கள் திறன் தெரிந்து, தேர்ந்து செவ்விதிற் போற்றியுள்ளனர். உலகப் பெருங் கவிஞர்களுள் ஒருவராகவும், தெய்வப் புலவராகவும் திகழும் திருவள்ளுவர், நமது திருக்குறளில் இன்பத்துப் பாலில், காதல் உணர்ச்சிகளைக் கலை நலம் கனிய இணையற்ற முறையில் அற்புதக் கற்பனையும் அழகும் மிகப் பொற்புற விளக்குகின்றார்.

(அ) ஒரு தலைவன் போர் மேலும் பொருள் மேலும் சென்று பிரிந்திருந்து பின் திரும்பி வருகின்றான். அவனைத் தலைவி, 'இதுகாறும் என்னை நீர் நினைத்தீரா?' என்று வினவினாள். அதற்கு அவன் 'ஆம் நினைத்தேன்' என்றான். அதனைக் கேட்ட அளவிலேயே, அவனது காதல் தலைவி, ஊடல் கொண்டு சினந்து அவனைப் புல்ல மறுத்தாள். அவன் திடுக்குற்று அவளின் ஊடலுக்குக் காரணம் என்னெனப் பரிந்து இரந்து வினவினான். 'நினைத்தேன் என்றீர்களே, மறந்த பின்னர் அன்றோ நினைப்பு வரும்? என்னை மறந்து தானே இருந்தீர்கள்!' என்று ஊடிப் புலம்பினாள். ?

''உள்ளினேன் என்றேன்மற் றென்மறந்தீர்?
என்றென்னைப் புல்லாள் புலத்தக் கனள்''

(ஆ) தலைவன் தலைவியுடன் பேசிக் கொண்டிருக்கின்றான். அப்போது அவனுக்குத் தும்மல் வந்தது. ஒருவருக்குத் தும்மல் வந்தால், அருகில் இருப்பவர் நீடினிது வாழ்க என்று அவரை வாழ்த்துவது பண்டைய மரபு. அம் முறையில் தலைவன் தும்மியபோது தலைவி வாழ்த்தினாள். வாழ்த்தி விட்டு உடனே அழத் தொடங்கினாள். தலைவனுக்குக் காரணம் தெரியவில்லை. ஏன் அழுகிறாய்? எனப் பரிந்து பணிந்து அன்புடன் வினவினான் தலைவன். 'என்னைத் தவிர வேறு யாரோ சில பெண்கள் தங்களை நினைக்கின்றார்கள் போலும்! அதனால் அன்றோ தங்களுக்குத் தும்மல் வருகின்றது. அவர்களுள் யார் நினைத்துத் தங்களுக்குத் தும்மல் ஏற்பட்டது?' என்று வினவி மீண்டும் ஊடல் கொண்டு அழத் தொடங்கிவிட்டாள் தலைவி.

''வழுத்தினாள் தும்மினேன் ஆக
அழித்தழுதாள்
யாருள்ளித் தும்மினீர்? என்று''

(இ) இதனால் தலைவன் மற்றொரு முறை தனக்குத் தும்மல் வந்தபோது, தும்மாமல் அடக்க முயன்றான். தும்மினால் அன்றோ தலைவி ஊடல் கொள்ளப் போகின்றாள்; தும்மலை அடக்கிக் கொண்டால், ஊடல் கொள்ள வாய்ப்பு நேராதன்றோ? என்று தலைவன் நினைத்தான். ஆனால் தும்மலை அடக்கியதையே காரணமாகக் கொண்டு, தலைவி ஊடல் கொண்டாள். பெரிதும் அழத் தொடங்கிவிட்டாள். ''என்னைத் தவிர வேறு யாரோ ஒரு பெண் தங்களை நினைக்கின்றாள். அஃது எனக்குத் தெரிந்து விடப் போகிறது என்று நினைத்து, அதனை எனக்கு மறைப்பதற்காகத் தான் தும்மலை நீர் அடக்கிக் கொள்ளுகின்றீர்' என்று சொல்லித் தலைவி மேலும் சினந்து புலந்தாள்.

''தும்முச் செறுப்ப அழுதாள் ;
நுமருள்ளல்
எம்மை மறைத்திரோ? என்று''

(ஈ) அப்போது தலைவன், 'இப்படி யெல்லாம் என் மீது அய்யுறாதே. இப்பிறவியில் இவ்வுடலில் உயிர் உள்ள அளவும், யான் உன்னை எப்போதும் பிரியவே மாட்டேன்.' என்று கூறித், தலைவியின் ஊடலைத் தணிக்க முயன்றான். 'இப்பிறவியில் பிரிய மாட்டேன் என்கின்றீர்களே! அங்ஙனமாயின் அடுத்து வரும் பிறவிகளிலெல்லாம் என்னைக் கைவிட்டு விடுவீர்களா? வேறு பெண்களை மணந்து கொள்ளுவீர்களா?' என்று கேட்டுத் தலைவி தன் கண்களில் இருந்து நீரைப் பெருக்கினாள்.

''இம்மைப் பிறப்பில் பிரியலம்
என்றேனாக்
கண்நிறை நீர்கொண் டனள்''

இவ்வாறெல்லாம் தமிழ் மக்களின் காதலின்ப வாழ்வின் உணர்ச்சிகளைத் திருவள்ளுவர் பெருமான், எத்தனையோ பல வகைகளில் தமது திருக்குறளில் அழகொழுகத் தீட்டி விழுமிய முறையில் விளக்குகின்றார்.

**(2) வீரம் :**

தமிழர்களின் பண்புகளில் தலை சிறந்த தொன்று வீரம். தமிழர்களின் வீரத்தினை, 'அருந்தமிழ் ஆற்றல்' என்பர் இளங்கோவடிகள். வீரம் என்பது வெறும் உடல் வலிமையன்று. உள்ளத்தின் திண்மையும், ஒழுக்கத்தின் நேர்மையும், உயர்ந்த குறிக்கோளுக்காக உயிர் விடுகையும் பிறவுமே வீரம் எனத் தமிழர் போற்றி வந்தனர். ஒரு சமயம் சேரமான் பெருஞ் சேரலாதனுக்கும், சோழன் கரிகாற் பெருவளத்தானுக்கும் போர் நிகழ்ந்தது. அப்போது கரிகாற் பெருவளத்தான் எறிந்த அம்பு ஒன்று சேரலாதனின் மார்பிற் பாய்ந்து முதுகின் வழியே வெளிப்பட்டது. அதனால் சேரலாதனுக்கு மார்பிலும் முதுகிலும் புண் ஏற்பட்டது. முதுகில் உள்ள புண்ணைக் கண்டு, எங்கே சிலர் போரில் புறமுதுகு காட்டியதாகத் தன்னை எண்ணி விடுவார்களோ என்று அஞ்சி நாணமுற்று, சேரலாதன் வடக்கிருந்து உயிர் துறந்தான். அவ்வாறே கரிகாற் பெருவளத்தானும் பெரிதும் நாணமுற்று வருந்தினான். ஏன் கரிகாற் பெருவளத்தான் நாணமுற்று வருந்தினான்? வஞ்சனையாற் சேரலாதனின் முதுகில் அம்பெறிந்தான் போலும் என்று, எவரேனும் தன்னைத் தவறாக எண்ணி விடுவார்களோ என்று கரிகாலன் பெரிதும் வருந்தி அஞ்சி நாணினான். போரில் புற முதுகு காட்டாத பண்பும், புறமுதுகு காட்டி ஓடுபவர் மீது அம்பெறியாத பண்பும், தமிழர்களின் வீரத் தன்மைக்குத் தலைசிறந்த சான்றுகளாகும்! புறநானூற்றில் இத்தகைய வீரச் செயல்கள் பலவற்றைக் காணலாம்.

## சுருதிப் பொருள்

சிவன்எம் மொழியைக் கொடியசனுண் டாளன் செப்பிடின் அவனுடன் உறைக;
அவனொடு கலந்து பேசுக; அவனோடு அருகிருந் துண்ணுக; என்னும்
உவமையில் சுருதிப் பொருள்தனை நம்பா ஊமரோ டுடன்பயில் கொடியோன்
இவன்எனக் கழித்தல், ஐயனே கதிவேறு எனக்கிலை; கலைசைஆண் டகையே!

—மாதவச் சிவஞான சுவாமிகள்.

# இராசராசசோழன் அய்ப்பசிச் சதய விழா

(செய்திச் சுருக்கம்)

தஞ்சை மாநகரில், அருள்மிகு பெருவுடையார் திருக்கோயிலை எடுப்பித்த தமிழ்ப் பெரு வேந்தன், இராசராச சோழனின் ஐப்பசிச் சதய விழா, வழக்கம்போல் இவ்வாண்டும் 9-11-78—10-11-78 ஆகிய இரண்டு நாட்கள், மிகவும் சிறப்புறத் தஞ்சைப் பெருவுடையார் திருக்கோயிலில் நிகழ்ந்தது. முதல் நாள் 9-11-78 வியாழன் அன்று காலை 6 மணி அளவில் ஒப்பிலியப்பன் கோயில் இசைநாத மணி திரு டி. கோ சின்னப்பா குழுவினரின் இனிய நாதசுர இசையுடன், யானையின் மீது பன்னிரு திருமுறைகள் திருவுலா வரவும், 42 ஓதுவா மூர்த்திகள் திருமுறை இசை மிழற்றவும், ஊர்வலமாகச் சென்று, அறநிலைய ஆணையர் திரு யு. சுப்ரமணியன், ஐ.ஏ.எஸ்., அவர்கள், இராசராச சோழனின் சிலைக்கு மாலை அணிவித்தார்கள். காலை 9 மணி அளவில் தஞ்சைப் பெருவுடையாருக்கு மிகப் பெரிய அளவில், 18க்கும் மேற்பட்ட பொருள்களால் திருமுழுக்குச் செய்யப் பெற்றது. அதுபோது தருமையாதீனத் தலைவர், திருப்பனந்தாள் காசி மடத்தின் தலைவர், திருக்களர் திருமடத்தின் சுவாமிகள், திருவாரூர்த் தட்சிணாமூர்த்தி சுவாமிகள் திருமடத்தின் தலைவர், வாளமர்கோட்டை திரு காத்தைய்ய சுவாமிகள் முதலிய, பெருமக்கள் பலரும் வந்து கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

அன்று மாலை விழாவில், சதய விழாக் குழுவின் தலைவர் திரு நடராச மாணிக்க நாட்டார், வரவேற்புரை கூறினார். தமிழகச் சட்ட மேலவைத் தலைவர், 'சிலம்புச் செல்வர்' திரு ம.பொ. சிவ ஞானம் விழாவினைத் துவக்கி வைத்தார். தஞ்சைப் பெரிய கோயிலின் பரம்பரை அறங்காவலர் இராச ஸ்ரீ ராசாராம் ராசா சாகேப் அவர்கள், திரு ம.பொ. சி. அவர்களுக்கு வரவேற்பு இதழ் வாசித்தளித்தார். சட்ட மேலவைத் துணைத் தலைவர் திரு ஜி. சுவாமிநாதன், பட்டுக்கோட்டை திரு அன்பு வேதாசலம், மேலவை உறுப்பினர் திரு என். சுந்தரேசத் தேவர், தொல்பொருள் துறை இயக்குநர் டாக்டர் திரு இரா. நாகசாமி, 'திருக்கோயில்' ஆசிரியர் திரு ந. ரா. முருகவேள், அருண்மொழியரசு திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள் ஆகியோர், சிறப்புரை யாற்றினர். அன்று இரவு இராசராச சோழன் சிலையுடன், சுவாமி அம்பாள் திருவீதி உலா சிறப்பாக நிகழ்ந்தது. திரு ஏ. கே. சி. நடராசன் கிளாரினெட் இசை வழக்கினார்.

மறுநாள் 10-11-78 வெள்ளியன்று காலை, 9 மணி அளவில் இரண்டாம் நாள் விழா தொடங்கியது. வழக்கறிஞர் திரு யு. தட்சிணாமூர்த்தி வரவேற்புரை வழங்கினார். அறநிலைய ஆணையர் திரு யு. சுப்ரமணியன், ஐ. ஏ. எஸ். தலைமை ஏற்றார். மதுரைப் பல்கலைக் கழக முன்னாள் துணைவேந்தர் திரு. டாக்டர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், டாக்டர் அவ்வை. நடராசன், பூண்டி கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் திரு சி. கோதண்டபாணி, கரந்தைப் புலவர் கல்லூரி முதல்வர் திரு கி. விருத்தாசலம், தருமை ஞானம்பிகை மகளிர் கல்லூரி முதல்வர் செல்வி பார்வதி, கவிதாமணி அ. வெ. ரா. கிருஷ்ண சாமி ரெட்டியார் ஆகியோர், சிறப்புரை ஆற்றினர். சதய விழாக் குழுவின் துணைத் தலைவர் திரு இ. பெ. இராசகோபால்பிள்ளை நன்றியுரை நவின்றார்.

பிற்பகல் ஐந்தரை மணி அளவில் மங்கள இசையுடன் கருத்தரங்கு தொடங்கியது. தவத்திரு. குன்றக்குடி அடிகளார் தலைமை வகித்தார். மக்கள் நல்வாழ்வுத் துறை அமைச்சர் மாண்புமிகு இரா. சௌந்தரராசன் அவர்கள், விழாத் துவக்கவுரை நிகழ்த்தினர். அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைத் தலைவர் பேராசிரியர் திரு க. வெள்ளைவாரணனார், திருக்குற்றாலம் பராசக்தி மகளிர் கல்லூரி முதல்வர் செல்வி சொ. பாகீரதி, பேராசிரியர், அ. ச. ஞானசம்பந்தம், முன்னாள் மதுரைப் பல்கலைக் கழகத் துணை வேந்தர், தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் ஆகியோர் சிறப்புரை நிகழ்த்தினர். தஞ்சை அறநிலைய உதவி ஆணையர் திரு த. நாகராசன் அவர்கள் நன்றியுரை நவின்றார். 'கலைமாமணி' ஷேக் சின்ன மௌலானா குழுவினரின் நாதசுர இசையும், இசைப் பேரறிஞர் மதுரை எஸ். சோமசுந்தரம் அவர்களின் இன்னிசை நிகழ்ச்சியும் நடைபெற, விழா இனிது நிறைவெய்தியது. விழா நிகழ்ச்சிகள், சென்னைத் தொலைக்காட்சி அலுவலர் திரு தஞ்சைவாணன் குழுவினரால் படமெடுக்கப் பெற்றன. தஞ்சைத் துணை ஆணையர் திரு டி. எஸ். சங்கரநாராயணன், தஞ்சை அறநிலைய உதவி ஆணையர் திரு த. நாகராசன் ஆகியோர் மேற்பார்வையில், அரண்மனைத் திருக்கோயில்களின் மேலாளர் திரு டி. என். பரமசிவம் அவர்கள், மிகவும் நல்ல முறையில் விழா நிகழ்ச்சிகள் நடைபெறச், சிறந்த முறையில் ஏற்பாடுகள் செய்திருந்தமை குறிப்பிடத்தக்கது.

—ஆசிரியர்.

# கருணை நலம்

' அருண்மொழியரசு '

திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள்

உலகத்திலே மக்கள் பலவகைகளிலும் பலப்பல கருத்துடையவர்களாகவே இருக்கின்றார்கள். ஒருவர் விரும்புகின்ற உணவை மற்றொருவர் விரும்புவதில்லை. ஒருவர் விரும்புகின்ற பொருளை மற்றொருவர் விரும்புவதில்லை. ஒவ்வொரு வருக்கும் ஒவ்வொரு நூலில் அளவு கடந்த விருப்பம். இப்படியாக ஒருவர் மனம்போல் மற்றொருவர் இருப்பதில்லை. கணவனுக்கும் மனைவிக்கும்கூட, கருத்து வேற்றுமைகளுண்டு.

ஆனால் ஒரே ஒரு வகையில் மட்டும் யாருக்கும், எந்நாட்டவருக்கும், எக்குலத்தவருக்கும், எத் தகுதியினருக்கும் கருத்துவேற்றுமை கிடையாது. எல்லோருக்கும் அந்த ஒன்றில் மட்டும் ஒற்றுமைப்பட்ட எண்ணமுண்டு. அது எது?

துன்பமின்றி இன்பமாக இருக்க வேண்டுமென்பது. இதில் யாருக்கும் கருத்து வேற்றுமை கிடையாது. பறவைகளும், விலங்குகளும் இப்படியே எண்ணுகின்றன. ஆனால், துன்பத்தைத் தொலைத்தவர்களும், இன்பத்தையடைந்தவர்களும் எங்கும் காண்பது அரிதாகவே இருக்கின்றது. அதற்குக் காரணம் துன்பத்தை நீக்கவும், இன்பத்தையாக்கவும் வழிவகை யின்னதென்று திட்டவட்டமாக அறிந்து கொள்ளாததே.

நாம் வயலில் என்ன விதை விதைக்கின்றோமோ, அதுவே விளைந்து வந்து நாம் உண்ணக்கூடியதாக அமைகின்றது. அதுபோல், மனதாலும், வாக்காலும், காயத்தாலும் பிற உயிர்களுக்கு நன்மை செய்வோமாயின், நாமும் துன்பமின்றி இன்பமாக வாழ முடியும். அங்ஙனமின்றிப் பிற உயிர்கட்கு மனவாக்குக் காயங்களால், துன்பமே செய்வோமாயின், அவை அத்தனையும் நமக்கே வந்து சேரும்.

''பிறர்க்கின்னா முற்பகல் செய்யின், தமக்கின்னா பிற்பகல் தாமே வரும்.''

''நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம், நோய் செய்யார்
நோயின்மை வேண்டுபவர்''

என்பார் திருவள்ளுவர்.

நோயென்பதற்குத் துன்பமென்பது பொருள். ஆகவே, நாம் பிற உயிர்கட்குத் துன்பம் செய்வோமாயின், நமக்கே துன்பத்தைச் செய்து கொண்டவர்களாக ஆகின்றோம் எனவே துன்பமின்றி வாழ விரும்புவோமாயின், நாம் பிற உயிர்கட்கு நிச்சயமாகத் துன்பஞ் செய்யக்கூடாது. இனி உயிர்களுக்குத் துன்பஞ் செய்யாமல் இருப்பதோடு அமைந்துவிடக் கூடாது. இன்பமும் செய்ய வேண்டும். பிற உயிர்கட்கு இன்பஞ் செய்வோமாயின், அது நமக்கே இன்பமாக அமையும்.

''மன்னுயிர் ஓம்பி அருளாள்வாற்கு இல்என்ப
தன்னுயிர் அஞ்சும் வினை''

என்கின்றார் திருவள்ளுவனார். ஆகவே எக்காலத்தும், தன்னுயிர்போல் மன்னுயிரை எண்ணி அவைகளுக்கு வரும் இடையூற்றை நீக்கி நன்மைபுரிய வேண்டும்.

நம்முடன் பழகும், பசு எருது எருமை ஆடு கோழி முதலிய உயிர்கள் நமக்குப் பல வகையிலும் உதவி புரிகின்றன. எருது உழுவதற்கும், பசு பாலும், சாணமும் கொடுத்தும் பயன்படுகின்றன. ஆடுகள் கம்பளத்திற்கு ரோமமும் வயலுக்கு எருவும் தருகின்றது. கோழி மணிக்கூண்டில் அலாரம் வைத்ததுபோல் வைகறையில் நம்மைத் துயில் உணர்த்துகின்றது. இங்ஙனமாக இந்தப் பிராணிகள் நமக்கு உதவிபுரிகின்றபோது, அவைகளுக்கு நாம் செய்கின்ற உதவி என்ன என்பதைச் சிந்திக்கின்றோமா? உபகாரம் செய்யவில்லையானாலும், அபகாரமாவது செய்யாமலிருக்கின்றோமா?

கழுத்தில் புண் உள்ள மாட்டை, வண்டியில் கட்டி ஓட்டுவதும், ஓடுகின்ற மாட்டை, மேலும் வேகமாக ஓடவேண்டுமென்று இரும்பு முள்ளால் குத்துவதும், அளவுக்கு மேற்பட்ட சுமையை வண்டியில் இட்டு எருதுகளை இழுக்குமாறு இம்சிப்பதும், மாடுகளுக்குப் போதுமான புல் முதலிய உணவுகளைத் தராமல் பட்டினி போடுவதும், எல்லையின்றி அவைகளுக்குத் தொல்லை கொடுத்து வேலை வாங்குவதும், கோழிகளைத் தலைகீழாகக் கொண்டுபோவதும் கொடுமையிலும் கொடுமை. இவைகளை நினைத்தால் கல்லும் கரையுமே! சிலர் மனம், கல்லினும் வலியதாக இக்கொடுமைகளை எவ்வாறு செய்யத் துணிகின்றதோ?

உயிர்களுக்கு நாம் செய்யும் துன்பம், செய்த அளவே நம்மை வந்து சாருமென்று எண்ணக்கூடாது. நாம் செய்யும் துன்பம் பன்மடங்காக அதிகரித்து வந்து சாரும். இச்சைபோல் திரியும் பசுங்கிளியைப் பன்னிரண்டு நாள் கூட்டில் அடைத்த பாவத்தினால் மறு

பிறப்பில் பன்னிரண்டாண்டு சிறைச் சாலையிலிருந்து, கோபன்னா (ராமதாஸர்) வேதனைக் கடலில் வீழ்ந்து துன்புற்றனர். இங்ஙனம் கருணையின்றிப் பிற உயிர்களுக்குத் துன்பம் செய்தவர்கள் பலர், ஒன்றுக்குப் பன்மடங்காகத் துன்புற்றனர்.

அப்பா நான் வேண்டுதல்கேட்டு
அருள்புரிதல் வேண்டும்
ஆருயிர்கட் கெல்லாம் நான்
அன்புசெயல் வேண்டும்

—இராமலிங்கர்.

திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் திருவீழிமிழலையில் தங்கியிருந்தார்கள். அப்போது வான்மழை சுருங்கி எங்கும் உணவுப் பொருள் அருகிப் பஞ்சம் பெருகியது. அதனைக் கண்ட இரு தவ சீலர்களும் இறைவனிடம் படிக்காசு பெற்று, பெரிய அளவில் உணவு தயாரித்து, பறைசாற்றி வறியார்க்கு முப்போதுந் தப்பாது உணவு அளித்தார்கள்.

திருமருகல் என்ற திருத்தலத்துக்கு ஞானப்பாலுண்ட ஞானசம்பந்த சுவாமிகள் எழுந்தருளினார். விடியற்காலை திருக்கோயிலுக்குச் செல்லுகின்றார். அங்கு ஒரு இளம் பெண் அழுது கொண்டிருந்தாள். தாவிப் படரக் கொழு கொம்பில்லாத தனிக்கொடி போல், அம்மடவரல் 'ஓ' என்று வாய்விட்டுக் கதறிப் பதறிக் கண்ணீர் வடித்து, துடித்து, துள்ளி அழுவதைக் கண்டார் ஞானசம்பந்தர். அவர், அறிவுடன் தொடர்பு கொண்டவர். ஞானம் என்றால் அறிவு. சம்பந்தம்-தொடர்பு கொள்வது. அறிவின் பயன் எது?. பிற உயிர் படும் துன்பத்தைக் கண்டு கருணை செய்வது தான் அறிவினால் ஆகும் பயன்.

''அறிவினா னாகுவ துண்டோ, பிறிதின்நோய்
தன்னோய்போல் போற்றாக் கடை''

என்கின்றார் திருவள்ளுவர்.

ஆதரவு இன்றித் தன்னந்தனியாக ஒரு பெண்மணி அழுவதைக் கண்ட திருஞானசம்பந்தர் ''நாட்டில் நாலாயிரம் நிகழ்ச்சிகள். நாம் வழிபாடு செய்யத் திருக்கோயிலுக்குப் போகின்றோம். யார் எதற்காக எங்கு அழுதால் நமக்கென்ன? ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருவகையில் துன்பம். ஊழ் காரணமாக உயிர்கள் துன்புறுகின்றன'' என்று மனதிற் கொண்டு கருதிக் கோயிலுக்குள் சென்றாரா? இல்லை இல்லை.

துன்பக் கடலில் விழுந்து துடிக்கின்ற அவள்பால், அப்பெருமானுக்குச் கருணை வெள்ளம் பொங்கி எழுந்தது. அவளுடைய துன்பத்தைக் களைந்த பின்னர் ஆலய வழிபாடு செய்யலாம் என்று அவர் கருதினார். அழுகின்ற அப்பெண்மணியை நோக்கி, ''அம்மா, அழாதே; உனக்கு உற்றஇடர் யாது?'' என்று தாய்போல் பரிந்து கேட்டருளினார். அவள் திருஞானசம்பந்தரைத் தொழுது அழுது கொண்டே கூறுகின்றாள்.

''அய்யனே! வைப்பூரில் வாழ்கின்ற தாமன் என்ற வணிகர் தலைவனுடைய மகள் யான். என் தந்தைக்கு ஏழு புதல்விகள். இவர் அத்தை மகன், தாய் தந்தையர் இன்றி எங்கள் வீட்டில் வளர்ந்து வந்தார். என் பிதா ஒவ்வொரு பெண்ணாக உனக்குத் தருவேன் தருவேன் என்று கூறி, சொன்ன சொல்லைக் காற்றில் பறக்கவிட்டு, தனவந்தர்கட்குக் கல்யாணம் பண்ணித் தந்தார். முடிவில் என்னையும் அவ்வாறே இவருக்குத் தருவதாக வாக்களித்து வேறொரு தனவந்தருக்குத் தருவதாகத் தீர்மானித்தார். வாக்களித்த மாத்திரத்திலேயே யான் என் அத்தை மகனுக்கு மனைவியாகி விட்டேன்; பிறகு மற்றவரை மணப்பது பெண்ணறமாகாது. ஆதலால் வாடி வருந்தியுள்ள என் அத்தை மகனும் நானும், உற்றாரையும் பெற்றாரையும் துறந்து, அயலூர் சென்று மணம் புரிந்து கொள்வோம் என்ற கருதிப் புறப்பட்டு வழி நடந்து வந்தோம். இரவு இந்த மடத்துத் திண்ணையில் படுத்தோம். அரவந் தீண்டி இதோ என் எதிர்காலக் கணவனார் இறந்துவிட்டார். பெருமானே! அரவந் தீண்டியும், யான் தீண்டாது அழுகின்றேன். விதிப்படிப் பாணிக்கிரகணம் ஆகாமையால், இவரை யான் தீண்டி அழவும் இயலாதவளாகக் கலங்கி நிற்கின்றேன். தாய், தந்தை, உடன் பிறந்தார் முதலிய அனைவரையும் துறந்து, இவரை நம்பி வந்தேன். இவர் என்னை நட்டாற்றில் விட்டு நடந்துவிட்டார்; இனி எனக்கு வாழ்வு ஏது? என் முன்வினை மூண்டது போலும்'' என்று கூறி முறையிட்டாள்.

திருஞானசம்பந்தர், அப்பெண்மணியின் துயரைக் கேட்டுப் பெரிதும் கருணை கொண்டார். ''அம்மா! அழாதே! திருக்கோயிலில் கருணைக் கடலாயுள்ள எம்பெருமான் உன் துயரைக் களைவார், வருந்தற்க'' என்று ஆறுதல் கூறியருளினார். அவளை அழைத்துக் கொண்டு திருக்கோயிலுக்குள் சென்றார். ''இறைவா! ஆலம் உண்ட நீலகண்டப் பெருமானே! நஞ்சராவணிந்த நம்பனே! பாம்பணையில் துயின்ற பரந்தாமனும், விதிவிலக்கு வரையும் வேதனும் போற்றும் வித்தகனே! இவள் உன்னை நாத்தழும்பேற ஏத்தி ஏத்தித் தோத்திரம் புரிகின்றாள். இவள் துயரைக் களைவாய்'' என்று சுவாமியிடம் முறையிட்டார்.

''சடையா யெனுமால் சரண் நீயெனுமால்
விடையா யெனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ இவள் உள் மெலிவே''

என்ற தேவாரப் பாடலைப் பாடியருளினார்.

அந்த அமுதப் பாடல் பாடியவுடன், இறைவனின் கருணையால், மாண்ட செட்டிக் குமாரன் உயிர்பெற்று எழுந்தான். அப்போது அல்லல்பட்டு அழுத அம்மங்கை, ஆனந்த வெள்ளத்துள் திளைத்தாள். இருவருக்கும் அங்ஙனமே திருமணஞ் செய்வித்தார் திருஞானசம்பந்தர். இறைவனுடைய கருணையை நாடிய ஞானசம்பந்தர், தானும் கருணையுடையவராகத் திகழ்ந்தார். **